# ஸ்ரீ ராமாநுஜன் — 235



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 20 | கீலக ௵ ஆடி ௴ 1968 ஜூலை ௴ வெளியீடு. | ஸஞ்சிகை 7 |
|---|---|---|


## நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி—பாசுரம் 9.

— ஆதனூர் —

இடரான வாக்கை யிருக்க முயலார்
மடவார் மயக்கின் மயங்கார்—கடவுளர்க்கு
நாதனூ ராதரியார் நானெனதென் னாரமலன்
ஆதனூ ரெந்தை யடியார்.

| | | | |
|---|---|---|---|
| அமலன் | அகில ஹேய ப்ரத்யநீகனான | மடவார் மயக்கில் மயங்கார் | பெண்களின் மோஹ வலையில் சிக்கமாட்டார்; |
| ஆதனூர் எந்தை | திருவாதனூரிலெழுந்தருளியிருக்குமெம்பிரானுக்கு | கடவுளர்க்கு நாதன் ஊர் ஆதரியார் | தேவர்களுக்கு நாதனான இந்திரனுடைய லோகத்தையும் ஒரு பொருளாக மதியார்; |
| அடியார் | அடிமைப்பட்டவர்கள் | | |
| இடர் ஆன ஆக்கை இருக்க முயலார் | பலவகைத் துன்பங்கட்கிடமாகிய அழுக்குடம்பு நிலைத்திருக்கவேணுமென்று முயற்சி செய்யார்; | நான் எனது என்னார் | அஹங்கார மமகாரச் சொற்களையும் சொல்லார் |

"ஆதனூரெந்தையடியார்" என்றெடுத்து இத்திருப்பதி யெம்பெருமானுக்கு அடிமைப்பட்டவர்கள் இத்தகைய சிறப்புகள் பெறுவர்கள் என்றது ஸமுதாயமாக பகவத் பக்தர்களான ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு விளையக்கூடிய பெருமைகளைச் சொன்னவாறு. ஆதனூரென்றது உபலக்ஷணமாகி ஸகல திவ்யதேசங்களையுங் காட்டிற்றாகி திவ்ய தேசங்களில் ஈடுபடுமவர்கள் தேஹாபிமானிகளாக மாட்டார்கள். காம மயக்கத்திற்கு உட்படார்கள்; சிற்றின்பவாசையை அறவே துறந்திருப்பர்கள்; அஹங்காரமமகாரங்களை

அறவே விட்டிருப்பர்கள்—என்றதாயிற்று. முமுக்ஷுப்படி த்வயப்ரகரணோபக்ரமத்தில் "இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் குணாநுபவ கைங்கர்யங்களே போதுபோக்காகையும்" என்றருளிச் செய்தபடி திவ்யதேச ப்ராவண்யமும் குணாநுபவ கைங்கர்ய ருசியுமுடைய ஸ்ரீ வைஷ்ணவர்கள் என்றுமழியாத பேரின்பத்தில் ஆசை கொண்டவராய்த் தீநெறிக்கண் செல்லாதிருப்பர் என்பது தேர்ந்த கருத்து.

"**கடவுளர்க்கு நாதனூராதரியார்**" என்றதற்கு—தேவேந்திரனது ஊராகிய சுவர்க்கத்தையும் விரும்பார் என்று பொருள்கொள்வதன்றி, தேவாதிதேவனாகிய ஸர்வேச்வரனது ஊராகிய ஸ்ரீவைகுண்டத்தையும் *எம்மாவீட்டுத்திறமும் செப்பம்* என்கிறபடியே விரும்பமாட்டார் என்று பொருள்கொள்ளவும் தகும். நந்திபுரவிண்ணகரத்தி லீடுபட்ட திருமங்கையாழ்வார் *மண்ணிலிதுபோலுநகரில்லையென வானவர்கள் தாம் மலர்கள் தூய், நண்ணியுறைகின்ற நகர் நந்திபுர விண்ணகரம்* என்றருளிச் செய்ததை இங்கு நினைப்பது. "சிந்தைமகிழ் திருவாறன் விளையுறை தீர்த்தனுக்கற்றபின்—சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லாத்தன்மை தேவபிரானறியும்" என்ற திருவாய்மொழிப் பாசுரமும் இதற்குப் பொருத்தமாக அநுஸந்திப்பது.

**ஆதனூ**ரென்றவிடத்து, **ஆ**—பசு; இங்குக் காமதேனுவைச் சொல்லுகிறது. காமதேனு ஆராதித்த திருத்தலமென்பர். ... ... ... (9.)

# ஸ்ரீவில்லிபுத்தூரில் ஆண்டாள் மஹோத்ஸவம்.

ஆண்டாளுடைய திருவாடிப்பூர மஹோத்ஸவம் விஷ்ணுவாலயங்களிலெங்கும் நடைபெற்றாலும் ஆண்டாள் திருவவதார ஸ்தலமான நாச்சியார் திருமாளிகையென்னும் ஸ்ரீவில்லிபுத்தூரில் பத்து நாளும் இரு வேளைகளிலும் வாஹனப் புறப்பாடுகளுடன் விசேஷ வைபவமாக நடைபெறுவது நாடறிந்ததே. மங்களாசாஸனபரரான பெரியாழ்வார் திருவவதரித்தவிடமான இத்தலத்திலும் மங்களாசாஸனபரர்கள் குறைந்து வருவதனால் தேவஸ்தான தர்மநிர்வாஹகர் மிக்க ஊக்கங்கொண்டு, வேதபாராயண ஸ்வாமிகளிருவர் தினப்படியாக நியமேந கைங்கரியம் செய்யும்படி ஸௌகரியமேற்படுத்திக் கொடுத்து இரண்டு ஸம்வத்ஸரமாக வேதபாராயண கைங்கரியம் குறையற நடந்துவருவது ப்ரஸித்தமானது. ஸமீபத்தில் நடைபெறவிருக்கும் (திருவாடிப்பூர) மஹோத்ஸவத்தில் உபயவேத கோஷ்டிகளையும் மிகச் சிறப்பாக நடத்திவைக்க திட்டமிட்டிருக்கும் தருமகர்த்தாக்கள் உரிய ஸம்பாவனையோடு ஸகல ஸௌகரியங்களையும் செய்து கொடுப்பதாக விளம்பரப் பத்திரிகை வெளியிட்டிருப்பது கண்டு மிக மகிழ்கிறோம். *வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல் வந்து மண்ணும்மணமுங் கொண்மின்* என்றழைத்தருளினவர் வாழுமிடத்தே யோக்யதையுள்ளவர்கள் சென்று வாசிக கைங்கரியம் செய்து இன்புறுக.

முற்காலத்தில் ஆண்டாளுடைய திருத்தேருத்ஸவம் மாதக்கணக்கில் நடைபெற்று வந்தபடியால் திருவாடிப்பூரத்தன்று சாத்துமுறை நடைபெறுவது அரிதாயிருக்கும். இப்போது சில ஸம்வத்ஸரங்களாக அங்ஙனன்றிக்கே யதாகாலம் நடைபெற்றுவருவது குறிக்கொள்ளத் தக்கது. ... ... ... ...

# நல்லார்கள்வாழும் நளிரரங்கத்தில் நற்போதுபோக்குகள்.

அறுபது ஸம்வத்ஸரங்களுக்கு மேலாக அடியேனுக்கு ஸ்ரீரங்காநுபவமுண்டு. முதன்முதலாக அடியேன் நம்பெருமாள் ஸன்னிதிக்கு விடைகொண்டபோது அங்கு வீதிதோறும் உபயவேதாந்த ரஹஸ்ய க்ரந்த காலக்ஷேபங்கள் அதிசயிக்கத்தக்க முறையில் நடந்துகொண்டிருந்தபடியை நேரில் அநுபவித்தவன். ஸ்ரீமதுபய வேதாந்தப்ரவர்த்தகர்களான பத்தராவிஸ்வாமி, கபிஸ்தலம் அனந்தாசார்யஸ்வாமி, எம்பார் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி, காரப்பங்காடு சிங்கப்பெருமாள்ஸ்வாமி, நங்கவரம் ஸாமிஐயங்கார்ஸ்வாமி, பஹுகுடும்பி ஸ்ரீநிவாஸாசாரியஸ்வாமி, காரப்பங்காடு தேசி. வரதாசார்யஸ்வாமி, திருநாராயணபுரம் குப்பண்ணுஸ்வாமி, ஸ்ரீமத்பரமஹம்ஸ. அயோத்யா ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி, திருக்கோட்டியூர் கோவிந்தாசார்யஸ்வாமி, மெய்யுவாசார்யஸ்வாமி, உத்தமசீலி ரங்கஸாமி ஐயங்கார்ஸ்வாமி, ரங்கராஜய்யங்கார்ஸ்வாமி முதலான பல மஹான்களின் காலக்ஷேப கோஷ்டிகளை அவ்வப்போதுகளில் அநுபவித்திருக்கிறேன்.

நன்னூலில் "பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல காலவகையினானே" என்றது இலக்கண இலக்கியங்களுக்கு மட்டுமன்றிக்கே பல விஷயங்களுக்கும் பொருந்துமன்றோ அந்த ரீதியில் பழைய ஸ்வாமிகள் மறைவதும் புதிய ஸ்வாமிகள் மலிவதும் ப்ராப்தமேயன்றோ. "அரங்கநகர்வாழ அடியார்கள் வாழ" என்று வாழ்த்தவேண்டியிருக்க, "அடியார்கள் வாழ அரங்கநகர் வாழ" என்று வாழ்த்திவருவது அடியார்கள் வாழ்வதே அரங்கநகரின் வாழ்ச்சியென்பதைக் காட்டித்தருமென்பர்.

சிலபல ஸம்வத்ஸரங்களாக ஸ்ரீமதுபயவே வியாகரண வேதாந்த வித்வான். திருமலை அனந்தாண்பிள்ளை. சதாபிஷேக கோவிந்த நரஸிம்ஹாசாரியர்ஸ்வாமி எம்பெருமானுர் ஸன்னிதியிலும் மணவாளமாமுனிகள் ஸன்னிதியிலும் மற்றுஞ் சிலவிடங்களிலும் பகவத்விஷய ரஹஸ்யாதி க்ரந்த ப்ரவசனங்கள் செய்து போருவது ப்ரஸித்தமானதே. ஸ்ரீமதுபயவே. ஸ்ரீஸூக்திரத்னாகர. இளையவில்லி. சடகோபாசாரியர்ஸ்வாமி பத்து ஸம்வத்ஸரங்களுக்கு மேலாக ஆழ்வார் திருநகரியிலிருந்து *அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ கட்டளை பெற்று நம்பெருமாள் ஸன்னிதியிலேயே நியதவாஸம் செய்துகொண்டு திருச்சி முதலானவிடங்களில் சிஷ்யப்ரார்த்தனைகளுக்கு அநுகுணமாக ஸமய விசேஷங்களில் ப்ரவசனங்கள் செய்து போருவதும் ஸ்ரீரங்க ஸ்ரீயின் அபிவிருத்தியில் சேர்ந்ததே.

இனி ஸந்நிஹிதகால விசேஷமொன்றை மிக்க ஆனந்தத்துடன் விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீமதுபயவே. திருநாங்கூர். பிரதிவாதிபயங்கரம் (சின்ன) க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமியின் மூத்த திருக்குமாரரான ஸ்ரீ அண்ணங்கராசாரியர்ஸ்வாமி காவ்ய நாடகாலங்காரங்களிலும் நியாய வேதாந்தங்களிலும் தலஸ்பர்சியான ஞானம் பெற்றவர். கீர்த்திமூர்த்தியான ஸ்ரீமதுபயவே. ஆஸூரி மஹாஸ்வாமி ஸன்னிதியிலே நியாய வேதாந்தங்களை அதிகரித்தது மட்டுமன்றிக்கே, குஜராத்தில் **வடதால்** என்னுமிடத்தில் பலகாலம் ப்ரவக்தாவாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. எம்பார். க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமிக்குப் பிறகு

அவருடைய ஸ்தானத்தை யலங்கரித்துப் பலர்க்கு ஸாமான்ய விசேஷ சாஸ்த்ர ப்ரவசனங்கள் செய்து, ஸித்தித்ரய வியாக்கியானம் முதலிய சில உயர்ந்த க்ரந்தங்களையு மெழுதி யசஸ்வியானவர். இவருடைய அப்ரதிமமான யோக்யதை தென்னாட்டில் பரிமளிக்க வேணுமென்று ஆசைகொண்ட ஸ்ரீரங்கவாஸிகளின் பாக்ய பரிபாகத்தினால், ஸ்ரீரங்கத்தில் கீழைச்சித்திரை வீதியில் பல ஸம்வத்ஸரங்களாக விளங்கிவரும் (கீர்த்தி மூர்த்தியான) குவளக்குடி. சிங்கமையங்கார்ஸ்வாமியின் தென்னாசார்ய ஸம்ப்ரதாய பாடசாலையில் ப்ரதான ப்ரவசனகர்த்தாவாக வரிக்கப்பட்டு நேற்று ஆனிமாதத்திலிருந்து காலை வேளைகளில் ஸ்ரீ பாஷ்ய காலக்ஷேபமும் இரவுவேளைகளில் ஸ்ரீ விஷ்ணு புராண ப்ரவசனமும் தொடங்கி நடத்திவருகிறார். எம்பெருமானாருடைய வாழி திருநாமத்தில் *தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்தான் வாழியே* என்று அநுஸந்தித்து வருகிறோம். ஸ்வாமி திருத்திவைத்தருளின தென்னரங்கச் செல்வங்களில் உபயவேதாந்த ப்ரவசனம் தலையானதென்னலாம். இச்செல்லம் நீங்காத செல்வமாக நீடூழி ஓங்கி விளங்க வேணுமென்று அகங்குளிர ஆசாஸிக்கிறோம்.

ஸ்ரீ வசனபூஷணத்தில் ஸதாசார்ய ஸ்வரூப சோதனம்பண்ணி யருளிச்செய்து போருகையில் மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீ ஸூக்தி யொன்று—"திருநந்த வனாதிகளைச் செய்கிறதிலுங்காட்டில் ஓராத்மாவைத் திருத்தினால் எம்பெருமான் திருவுள்ள முகக்கும்" என்றுள்ளது. ப்ரக்ருத ப்ரவக்தாவின் மாதாமஹராய் சித்ரகூடம் ஸாமி ஐயங்கார் என்று ப்ரஸித்தராயிருந்த மஹான் திருநாங்கூரில் நந்தவன கைங்கரியம் செய்து போந்தவரென்று ப்ரஸித்தி. அவருடைய கைங்கரியத்திற்காட்டிலும் இவருடைய கைங்கரியம் மிகச்சிறந்ததாகையாலே ஸ்ரீரங்கநாதனும் ஸ்ரீரங்கநாச்சியாரும் திருவுள்ள முகந்தருளி இதனை மேன்மேலும் செழித்தோங்கச் செய்து போருவர்களென்பதில் ஸந்தேஹமில்லை. ப்ரக்ருத பாடசாலையை ஸ்தாபித்தருளின கீர்த்திமூர்த்தியான ஸ்ரீமதுபயவே. சிங்கமையங்கார் ஸ்வாமியை அடியேன் நிச்சலும் நினைப்பவன். அவருடைய திருப்பேரனாராய் இப்பாடசாலையின் பரிபாலனத்திலும் அபிவிருத்தியிலும் மிக்க நோக்குடையவரான ஸ்ரீமான் ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி ஸ்ரீரங்கநாதன் திருவருளை மிகமிகப் பெற்றவர் ஸ்ரீரங்கவாஸிகளுக்கு இந்த மஹாபாக்யத்தைப் பெறுவித்ததற்காக *தழைநல்ல வின்பந்தலைப்பெய்து எங்குந்தழைக்க வேணுமென்று மங்களாசாஸனம் பண்ணுகிறோம். ... ... ...

# தேவப்பெருமாளும்—ஆழ்வார்களும்

காஞ்சிக்கு வந்து அடியேனோடு வார்த்தையாடுபவர்களில் சிலர் 'தேவப் பெருமாளுக்கு ஆழ்வார் பாடல் கிடையாதென்கிறார்களே, மெய்தானோ?' என்று கேட்பது வழக்கம். அப்படிப்பட்டவர்களை நோக்கி 'உங்களுக்கு ஆழ்வார் பாசுரங்களில் பரிசயமுண்டோ?' என்று கேட்டால், 'இல்லை, பல பெரியார்கள் அப்படிச் சொல்லக் கேட்டபடியால் தேவரீரைக்கேட்டால் உண்மை தெரியவருமென்றெண்ணிக்கேட்டபடி' என்பர்கள். திருவயிந்திரபுரத்தில் வாழ்ந்த சேட்லூர் நரஸிம்ஹாசாரியரென்பவர் பல

வருஷங்களுக்கு முன்பு "காஞ்சீபுரம் மதுராந்தகம் மன்னார்குடி .....இதெல்லாம் ஒரு வகுப்பான க்ஷேத்ரங்கள்; இவற்றுக்கு ஆழ்வார் பாடல் இல்லாமலிருந்தாலும் ஆசாரியர்கள் அபிமானித்த பெருமையுண்டு" என்று ஒரு சுவடியில் எழுதிவைத்தார். இது முப்பது வருடங்களுக்கு முற்பட்ட செய்தி, அப்போது அவர்க்கு உணர்த்த வேண்டிய தத்துவங்களையுணர்த்தி முடிவில் "காஞ்சீம் வீக்ஷ்ய ஹநூ நிஜே பளபளாத் காராஞ்சனைஸ் ஸம்ஸ்க்ரியாத்" என்று முடிவுபெறுமொரு சுலோகமிட்டிருந்தோம். 'இந்த நமது நூலுக்கு ஆர்ஜவத்துடன் விடை கூறுவதானால் கூறுக; இல்லையேல் கச்சிப்பதியைத் திசை நோக்கி நின்று தம்முடைய தவடைகளில் பளபளபளவென்று அறைந்து கொள்க' என்பதுதான் அந்த சுலோகத்தின் தாற்பரியம். முடிவாக மன்னிப்புக் கடிதமெழுதி சாந்தரானார். அந்த மன்னிப்புக் கடிதம் அச்சேறியுள்ளது.

நமக்குப் பரமஸுஹ்ருந்மணியும் மஹாவிவேகியுமான [அடையாறில் வாழும்] ஸ்ரீமான். M. S. வரதாசாரியார், ஒரு மார்கழி மாத முடிவில் [இப்போது உத்தமாச்ரமியாய் ஸேவை ஸாதிக்கின்றவொரு ஸ்வாமி] அப்போது க்ருஹஸ்தாச்ரமியாயிருந்து சென்னையில் ஒரு பேட்டையில் ஆண்டாள் திருக்கல்யாணமுபந்யஸிக்கையில் பல எம்பெருமான்கள் ஸ்வயம் வரத்திற்கு எழுந்தருள்வதாகவும் தோழியானவள் ஒவ்வொரு எம்பெருமானையும் பற்றி ஆண்டாளிடம் குறைநிறைகளைக் கூறி வருவதாகவும் வைத்து, தேவப்பெருமாளைப்பற்றிச் சொல்லுகையில் சில நிறைகளைச் சொல்லிவிட்டு "ஆனால் இவர்க்கு ஆழ்வார் பாடலில்லையென்பது பெரிய குறை" என்று தோழி கூறினதாகவும், அப்படியானால் தள்ளு இவரை என்று சொல்லி ஆண்டாள் மேலே சென்றதாகவும் உபந்யஸிக்க, அது கேட்டுத் தாம் வைரஸ்யமடைந்து எழுந்து போய்விட்டதாக நம்மிடம் தெரிவித்துக் கொண்டார். அந்த உபந்யாஸகர் இன்னமும் அப்படியே சொல்லிக் கொண்டிருப்பர் போலும். இப்படி சிலரோ பலரோ 'யாவச்சக்யம் ச்ராவயிஷ்யே' என்கிற கணக்கில் ப்ரதிபன்னமானவற்றைச் சொல்லி வருவதனால் பாமர ஜனங்கள் இருளும் மருளுங்கொள்ள இடமுண்டாகிறது.

ஸ்ரீ ராமாநுஜன் 229ல் நாம் வெளியிட்டுள்ள நற்பொருளெழுநூறின் முதல் நூறில் (பக்கம் 5ல்) **"யஸ்யாநுபாவ மதிகந்து** மித்யாதி வரதராஜ பஞ்சாசத் பத்யத்தின் விவரணமாக எழுதியிருப்பதை இங்கெடுத்துக் காட்டுகிறோம்.

"(வரதரா. 2.) [**யஸ்யாநுபாவதிகந்துமசக்நுவந்தோ முஹ்யந்தி அபங்குரதியோ முநிஸார்வபௌமா:**] இதற்குப் பலர் என்ன கருத்துச் சொல்லுகிறார்களென்றால், தேவப்பெருமாளுக்கு ஆழ்வார்களின் மங்களாசாஸனம் கிடையாதென்று தாங்களாக ஒரு முடிவு செய்துகொண்டு இதை தேசிகனும் ஸ்பஷ்டமாக ஸாதிக்கிறார் என்று பிடிகையிட்டு 'ஆழ்வார்கள்' தேவப்பெருமாளுடைய பெருமையில் மோஹித்துப்போன படியாலே வாய்திறந்து பாசுரம்பாட மாட்டிற்றிலர்' என்பதாகப் பொருளுரைத்து வருகிறார்கள். (முநிஸார்வபௌமா:) என்றதற்கு ஆழ்வார்களே பொருளென்பதை மறுப்பாரில்லை; அவர்கள் மோஹித்தார்களென்பதும் இல்லைசெய்யத் தக்கதன்று. ஆழ்வார் திருவாக்குக்களில் தேவப்பெருமாள் பாடல் ஸ்பஷ்டமாக விளங்காநிற்க இந்த சுலோகங்கொண்டு அதனை இல்லைசெய்யப் போகாதன்றோ. பூதத்தாழ்வார்

திருவந்தாதியில் *என்னெஞ்சமேயான்* *அத்தியூரான் புள்ளையூர்வான்* என்கிற பாசுரங்களும், பெரிய திருமொழியில் *வரந்தரும் மாமணிவண்ணனிடம்* என்கிற பாசுரமும் தவிர கச்சியென்று வருமிடங்களிலெல்லாம் தேவப்பெருமாளை விவக்ஷித்தே தீர வேண்டிய நிர்ப்பந்தமுண்டு; எனெனில், **காஞ்சீ** என்கிற வடசொல்லே **கச்சி**யெனத் திரிந்தது; "க இதி ப்ரஹ்மணோ நாம தேந தத்ராஞ்சிதோ ஹரி:, தஸ்மாத் காஞ்சீதி விக்க்யாதா புரீ புண்யவிவர்த்திநீ* என்கிற புராணச்லோகத்தின்படி பிரமனால் ஆராதிக்கப் பட்ட தலத்தையேயன்றோ காஞ்சியும் கச்சியுங்காட்டும். தேவப்பெருமாளுக்கு ஆழ்வார் மங்களாசாஸன முள்ளதென்பதை தேசிகன் கண்டோக்தியாலும் வெளியிட்டவர்; எங்ஙனேயென்னில்; த்ரமிடோபநிஷத் ஸாரத்தில் ***பரத்வாத்யைரித்தம்*** என்று தொடங்கும் ஐந்தாவது சுலோகத்தில் ***ப்ரதமசதகே வீக்ஷ்ய வரதம்*** என்று திருவாய் மொழி முதற்பத்துமுழுதும் தேவப்பெருமாள் விஷயமென்று ஸாதித்தருளினர். இது ஸுஸ்பஷ்டமான உக்தியாதலால் கண்ணழிக்கமுடியாதது திருவாய்மொழி முதற் பாசுரத்தில் *அயர்வறுமமரர்களதிபதி* என்றிருக்கையாலே அதுமட்டும் தேவப்பெருமாள் விஷயமென்று ஒருவாறு சொல்லப் பொருந்தும்; முதற்பத்துமுழுதும் தேவப்பெருமாள் விஷயமென்று கொள்வதற்கு ஔசித்யமுண்டோவென்று சிலர் கேட்கக்கூடும். முதற்பத்தின் முடிவு பாசுரத்தில் ***மணியை வானவர் கண்ணனை*** என்றிருக்கையாலே [வானவர் கண்ணன்—தேவாதிராஜன்] என்று கொண்டு உபக்ரமோபஸம்ஹாரந்யாயத் தாலே ***ப்ரதமசதகே வீக்ஷ்ய வரதம்*** என்றருளிச்செய்தது பொருந்தும்."

எவ்வளவெழுதினாலென்ன? இருள் துயக்கு மயக்கு மறப்புகளின் வசப்பட்ட வர்களுக்கு எல்லாம் ஊமையரோடு செவிடர் வார்த்தையாமத்தனையே. ... ❁

## — இரு குறிப்புகள் —

(1.) மேலே ப்ரஸ்தாவித்த நற்பொருளெழுநூறின் சேஷமான நூறுகள் அச்சாகி வருகின்றன. இரண்டு மூன்று நான்கு நூறுகளை விரைவில் (ஸ்ரீராமாநுஜன் மூலமாகவே) அநுபவிக்கப்பெறுவீர்கள். ... ... ... ❁

(2.) ஸ்ரீமதுபயவே. மதுராந்தகம். வித்வான். வீரராகவாசாரியார் ஸ்வாமிகள் எட்டு மாதங்களுக்கு முன்பு வெளியிட்டிருந்த **ஸம்ப்ரதாயஸுதா** என்னுஞ் சுவடிக்கு நம்முடைய மறுப்பு நூல் ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யமென்பது ஸ்ரீ ராமாநுஜன் 229-லும் 230-லும் வெளிவந்து **'ஸம்ப்ரதாயஸாம்ராஜ்ய ஸமாபனம்'** என்கிற வியாஸத்தோடு ஒருவாறு முடிவு பெற்றிருக்கின்றதென்பதை நினைவூட்டுகிறோம். அந்த ஸமாபன வியாஸத்தை அன்பர்கள் மறுபடியும் ஒருமுறை வாசிக்கவேணுமென்றும் கேட்டுக் கொள்ளுகிறோம். அந்த வித்வான் ஸ்வாமி நமது ஸாம்ராஜ்ய நூலுக்கு ஏதோ பதிலெழுதி மதுரையில் அச்சிடுவதாக புதுடில்லி நண்பரொருவர் தெரிவித்திருந்ததையும், ஸ்ரீ உவே. ராவ்ஸாஹிப். S. ராகவையங்கார் ஸ்வாமியின் ஸ்ரீமுகத்திலுள்ள அருமையான விஷயங் களையும் விளக்கினோம். பல மாதங்கள் பொறுத்து மதுராந்தகம் ஸ்வாமி இப்போது ஏதோ சில விஷயங்கள் எழுதியனுப்புகிறார். இதைப்பற்றியும் மேலே தெரிவிப்போம். வைதிக மநோஹராவிலும் காண்க. ... ... ... ❁

# நமது அரியபெரிய நண்பரின் மறைவு.

சென்னை (வாழைப்பழ வியாபாரம்) ஸ்ரீமான். M. R. கோவிந்தசாமி நாயுடு வென்றால் தெரியாதவர்கள் வைணவர்களில் யாருமிருக்கமாட்டார். நம்முடைய திவ்யப்ரபந்ததிவ்யார்த்த தீபிகையை வெளியிட்ட மஹான் இவர் என்பதை யாரும் மறந்திரார். நமது பல புத்தகங்களில் இவரது பெயர் பொறிக்கப்பட்டு விளங்குகின்றது. இவர் சமீப காலத்தில் (29–5—68) சென்னையில் விண்ணுலக மெய்தினரென்பதை மிக்க வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறோம். இந்த சந்தர்ப்பத்தில் இவருடைய பெருமைகளைச் சிறிது தெரிவிக்கவேண்டியது கடமையாகிறது. இது நரஸ்துதியில் சேராது; நல்லார் நலனுரைத்தல்; நன்றி பாராட்டுதல் என்னும் நன்மைகளிற்சேரும். எனது தன்சரிதையில் பக்கம் 155, 156களில் எழுதிய விஷயங்களை விரித்துரைப்பதிது.

M. R. கோவிந்தசாமியும் அவருடைய சகோதரரான உயர்திரு. கன்னைய நாயுடுவும் எமக்கு 1923ல் அன்பராயினர். அன்பர் என்கிற சொல் சாமானியமானது; அது போதாது. நடையாடுமுயிர்கள் என்னவேணும். சென்னையில் சிலபலவாண்டுகள் காலக்ஷேபம் செய்துகொண்டு எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. திருக்கண்ணபுரம் பட்டப்பா ஸ்வாமிகளின் திருவடி ஸம்பந்தம் பெற்றவிவர்கள் மிகச்சிறந்த ஸ்ரீவைஷ்ணவமணிகள். மூத்தவரான கோவிந்தசாமி நாயுடுவுக்கு ஸ்ரீ **வைஷ்ணவரத்ன**மென்று விருதளித் திருந்தேன். இவர்களுடைய நட்பு எனக்கு ஏற்பட்ட வரலாற்றைச் சிறிது விளம்புகிறேன்.

நான் திவ்யப்ரபந்தங்களுக்கு **திவ்யார்த்ததீபிகை** யென்று உரையெழுதத் தொடங்கின காலத்தில் அதை மாதச் சஞ்சிகையாகவல்லவா வெளியிட்டு வந்தேன். அந்த சஞ்சிகைக்கு இவர்களும் சந்தாதாரர்களாக இருந்து வந்தார்களாம். அப்போது இவர்களை நான் இன்னாரென்றறியேன். மாதச் சஞ்சிகையனுப்புகிற பொறுப்பையும் ஒரு அச்சுக்கூடத் தலைவர் ஏற்றுக்கொண்டிருந்தார். அதனால் இவர்களுடைய பெயரையும் நான் அறியாதவனாயிருந்தேன். சஞ்சிகை மாதந்தோறும் சென்று கொண்டிருக்கிறது; இவர்கள் வாங்கிப் படித்துக்கொண்டிருக்கிறார்கள்.

இப்படியிருக்கையில் ஒரு நாள் "ம. ரா. கோவிந்தசாமி நாயுடு" என்று கையெழுத்திட்ட கடிதமொன்று கிடைத்தது. "ஸ்வாமிகள் வெளியிட்டுவரும் திவ்யப்ரபந்த திவ்யார்த்ததீபிகை எங்கள் வாழ்நாளில் முடிந்து அனுபவிக்க முடியாது போலிருக்கிறதே; விரைவாக முடிவுபெறும்வழியைத் தேடுகிறோம்; ஸ்வாமிகளின் திருவுள்ளத்தை உடனே தெரிவிப்பது" என்று அதில் எழுதப்பட்டிருந்தது. பிறகு நேரிலும் வந்து விட்டார்கள். மேலே நிகழ்ந்த செய்திகளை விரிவாக எழுதவேணுமோ? அப்போது சென்னை கிடங்கு தெருவில் மாடல் அச்சுக்கூடமென்று மிகச்சிறந்ததொரு பிரெஸ்ஸுக்குத் தலைவராயிருந்த உயர்திரு. கோபாலஸாமி நாய்க்கரென்பவரும் [இவர்களுடைய நெடுநாளைய நண்பர்] எனக்கும் நண்பராகி மிகமிக அழகிய முறையில் அச்சிட ஆரம்பமாயிற்று. அதற்குமுன்னே தீபிகை பதவுரையும் பொழிப்புரையுமாக

மட்டும் இருந்து வந்தபடியால், "எவ்வளவு விரிவாக எழுதினாலும் நாங்கள் அச்சிடக் காத்திருக்கிறோம்; அதைப்பற்றி கவலையே வேண்டாம்; விஸ்தாரவுரையாகவே எழுதித் தரவேண்டும்" என்று அவர்கள் அபேக்ஷிக்க 'இது எம்பெருமானுடையவும் ஆழ்வாராசாரியர்களினுடையவும் திருவாணையேயல்லது மனுஷ்யப்ரார்த்தனையன்று' என்று உறுதிகொண்டு, திருப்பல்லாண்டே தொடங்கி மறுபடியும் விரிவுரையெழுதத் தொடங்கியாயிற்று.

முந்தின பொழிப்புரைப் பதிப்பு அனேகமாக முதலாயிரம் பூர்த்தியாகியிருந்ததாக நினைவு. அப்பதிப்பும் இப்போது பலரிடமுள்ளதே. மிக விரிவான திவ்யார்த்ததீபிகை யுரை எழுத ஆரம்பித்தநாளில் அடியேன் ஸம்ஸ்க்ருதத்தில் மஞ்ஜுபாஷிணீ பத்ரிகையையும், தமிழில் ப்ரஹ்மவித்யா பத்ரிகையையும் நடத்திவருகிறேன். வேதவேதாந்த வைஜயந்தீ வித்யாலய கார்ய நிர்வாஹங்களையும் பார்த்துவருகிறேன். இக்காரியங்களில் அதிக அவகாசத்தைச் செலவிடவேண்டியிருக்கும். இவற்றினிடையில் திவ்யார்த்த தீபிகையுரை எழுதியாகவேண்டும். எப்படியோ எழுதியாகி அச்சாகி உலகம் பரவி விட்டது. அந்த நாட்களை நினைத்துக்கொண்டால், அதெல்லாம் ஜன்மாந்தரத்திலா? இந்த ஜன்மத்தில்தானா? என்று ஆலோசிக்க வேண்டியிருக்கிறது.

மேலே ப்ரஸ்தாவித்த கோவிந்தஸாமி நாயுடு மறைந்து போனாலும் அவருடைய இளைய சகோதரரான கன்னைய நாயுடு சென்னையில் இனிது வாழ்ந்து கொண்டிருக்கிறார். இந்த சகோதரர்களிருவரும் திவ்யார்த்த தீபிகையுரை அச்சேறுவதற்கு எடுத்துக்கொண்ட முயற்சிகளும் சிரமங்களும் சொலப்புகில் வாயமுதம் பரக்கும். அச்சேறுவதற்கு மட்டுமன்று இவர்களின் சிரமம்; உரையெழுதப் பெற்றதும் இவர்களாலேயேயென்று உண்மையைக் கூறுவேன். தினப்படியாக ஒரு கற்றை எழுதியனுப்பியாக வேண்டும். அது மறுநாளே அச்சடித்து ப்ரூப் வந்துவிடும். அதைத் திருத்தியனுப்புவதுடன் மேற்கொண்டு அச்சிட ஒரு கற்றை எழுதியனுப்பியாக வேண்டும். அப்போது ஞாயிற்றுக் கிழமையும் தபால் வரத்துப்போக்கு இருந்தகாலம். அன்றைக்கும் விடுமுறை கிடைக்காது. இவ்விடமிருந்து ஒருநாள் புக்போஸ்டு சென்று அவர்களுக்குக் கிடைக்காமலிருந்தால் மறுநாள் கடுமையான கடிதம் வந்துவிடும். சில சமயம் நேரிலும் வந்துவிடுவர்கள்.

எனக்கு எல்லாக் காரியங்களையும்விட அர்ச்சாவதார அநுபவம் மிக மேம்பட்டதாதலால் மஹோத்ஸவங்கள் குறுக்கிட்டால் அவற்றின் அனுபவம் தவிர்க்கமுடியாததாகவேயிருக்கும். இதனிடையில் எத்தனை யாத்திரைகள் செய்திருக்கிறேன். எதையும் நிறுத்திக்கொள்ள முடிகிறதில்லை. ரைல்வண்டிப் போக்கிலும் வைடிங்ரூம்களிலும் ப்ளாட்பாரங்களிலும் எழுதிக்கொண்டும் திருத்திக்கொண்டும் புக்போஸ்டுகள் கட்டிக் கொண்டுமிருந்ததைப் பார்த்தவர்கள் இன்னும் பல்லாயிரவருளர். அன்னவர்கள் என்னைச் சந்திக்கும் போதுகளில் இந்த நிகழ்ச்சிகளை நினைப்பூட்டுவதுண்டு.

அப்படியெல்லாம் ஓய்வின்றி உழைக்கும்படி செய்தவர் கோவிந்தசாமி நாயுடு. இதை யெழுதிக்கொண்டு போகையில் நினைவுக்கு வந்ததொன்றை எழுதாமலிருக்க முடியவில்லை. தீபிகையுரை அச்சாகி வருகையில் பதரிகாச்ரமயாத்திரை புறப்படக்

குதூஹலமுண்டாயிற்று. நாயுடுவிடம் சொல்லாமல் எங்கும் நான் பதசலனம் செய்வதில்லாமையால் அவரிடம் சென்று "இப்படி ஆசையுண்டாகியிருக்கிறது; போய்வர அனுமதி தரவேணும்" என்றேன். அதற்கு அவர் "வெகுதூர தேசமாயிற்றே; நாளாகுமே; பெரிய காரியம் தடைபட்டு நின்றுவிடுமே!" என்று கவலையுடன் கூறினர். 'அதிகதாமதமாகாது; காசி அயோத்யை முதலான க்ஷேத்திரங்கள் பல தடவை சென்ருயிற்று; இப்போது எங்கும் போகாமல் பதரிகாச்ரமமொன்றே சேவித்து வருவேன்; எல்லாம் காஞ்சியிலிருப்பது போலவே நடக்கும்; எழுதியனுப்பிக் கொண்டேயிருப்பேன், ப்ரூப் (Proof) அனுப்பிக்கொண்டேயிரும்' என்றேன். நான் சொன்னபடி நடத்துவேனென்று அவர்க்கு நம்பிக்கையுண்டாதலால் 'எழுந்தருளி விரைவில் மீளுக' வென்று இசைந்து, கையில் 500 ரூபாயும் கொடுத்தார். புறப்பட்டு விட்டேன். சொன்னபடி நடத்திவருகிறேன். நான் தெரிவிக்கும் விலாஸங்களுக்கு ப்ரூப் வந்துகொண்டே யிருக்கிறது. நாள் தவருமல் திருத்தியனுப்பிக்கொண்டிருக்கிறேன். மேலே கேளுங்கள்.

ஸ்ரீநகர் போஸ்டு விலாஸம் கொடுத்திருந்தேன். காச்மீரிலுள்ள ஸ்ரீநகரன்று. தேவப்ரயாகை தாண்டி கீர்த்திநகர் தாண்டி அங்கிருந்து மூன்ருவது மைலிலுள்ள ஸ்ரீநகர். அவ்வூர் விலாஸம் கொடுத்திருந்தேன். அக்காலத்தில் கீர்த்திநகர் வரைக்குமே பஸ் போக்குவரத்து இருந்தது. அங்கிருந்து ஸ்ரீநகர்க்கு நடந்து வந்து அங்கே வதரிக்கு வாஹனம் ஏற்பாடு செய்துகொள்ளவேண்டும். நான் அநுசரர்களுடன் கீர்த்தி நகரில் இராத்தங்கிவிட்டு, அங்கிருந்து பின் மாலை புறப்பட்டு ஸ்ரீநகர் வருகிறேன். ஊருக்குள்ளே சென்று தபாலாபீஸ் எங்கிருக்கிறதென்று விசாரித்துத் தபால்கள் வாங்கவேணுமென்றெண்ணி வந்துகொண்டிருக்கையில், பெரியதொரு ஆலமரத்தினடியிலிருந்துகொண்டு பல் துலக்கிக்கொண்டிருந்த போஸ்டு மேஸ்டர் அருகே வருகின்ற என்னைப் பார்த்ததும் **"ஸ்வாமீஜீ அணங்கராசாரீஜீ! ஆயியே ஆயியே, ஆப்கோ பஹோத் டாக் ஆயாஹை. கோவிந்தஸாமீ பேஜா ஹை"** என்ருன். அப்போது பொழுது நன்ருக விடியவில்லை; அவனே முன்பின் பரிசயமில்லாதவன். என் திருமணைக்கொண்டும், தபால்களில் கண்ட ப்ளாக்கைக் கொண்டும் இன்னுரென்று அறுதியிட்டு விட்டான். "From. M. R. Govindasami Naidu. 32, Bunder Street, G. T. Madras." என்றிருந்ததைக் கண்டு **"கோவிந்தசாமீ பேஜா ஹை"** என்று சொல்லி விட்டான். உடன் வந்தவர்கட்கெல்லாம் வெகு வியப்பாயிருந்தது. அன்று முழுவதும் அங்கே தங்கி, வந்தவற்றைத் திருத்தியும் மேலுக்கு எழுதியும் அனுப்பிவிட்டு மேலே சென்றேன்.

இப்படி எத்தனை விஷயங்களெழுதுவேன்! இதைப்பற்றி மட்டும் எழுதப் புகுந்தால் பல நூறு பக்கங்களெழுதினலும் போதாது. கோவிந்தசாமியின் முயற்சியினல் அச்சிட்டது திவ்யப்பிரபந்தவுரைமட்டுமன்று; மற்றும் முகுந்தமாலை தொடங்கி நக்ஷத்ரமாலையீருக ஸகலஸ்தோத்ரங்களுக்கும் என்னை உரையெழுதச் செய்தவரும் உடனுக்குடனே அச்சிடுவித்தவரும் அவரே. அக்காலத்தில் வேதலக்ஷண [illegible] [illegible]ந்திருந்தது. அது ஸம்பந்தமான நூல்களை அச்சிடுவித்தவர் [illegible]

செலவு செய்துவிட்டார். அந்த அச்சின் பொலிவும் காகிதத்தின் அழகும் உலகம் போற்ற நின்றது. தேடியெடுக்க நினைத்தாலும் ஒரு அச்சுப்பிழைகூட காணக் கிடைக்காது. இப்புத்தகங்களை அவர்கள் மிகுந்த உற்சாகத்துடன் ஆயிரக்கணக்கான பிரதிகள் அச்சிடுவித்தபடியால் அப்பதிப்பு நூல்களெல்லாம் இற்றைக்கும் பலவிடங்களில் பலரிடங்களில் சேமம் பெற்றிருக்கக் காணலாம். பிறகு மறுபதிப்புகள்பல நான் செய்வித்துக் கொண்டாலும் முற்பதிப்பின் அழகின் ஏகதேசமும் வாய்க்கவில்லையிவற்றில். இதை உலகமெல்லாம் சொல்லுகிறது.



ஸ்ரீ வைஷ்ணவரத்னம். M. R கோவிந்தசாமி நாயுடு.

இந்த நாயுடுக்களுக்குப் பிரபல வாழைப்பழ வியாபாரிகளென்று பிரசித்தி. கோவிந்தசாமி வியாபார சம்பந்தமான காரியங்களில் தாம் அதிகமாகத் தலையிடாமல் இரவும் பகலும் திவ்யார்த்த தீபிகை ப்ரூப் பார்ப்பதையே பெரிய காரியமாகக் கொண்டிருந்தார். முடிவாக என்னிடம் வரும் ப்ரூப்களில் பசிபட வேண்டியிராது. அவர்க்குத் தமிழிலக்கியங்களில் நல்ல பயிற்சியுண்டு. அவருடைய ஆயிரக்கணக்கான கடிதங்கள் எனக்குக் கிடைத்தவையுண்டு. அவை ஒவ்வொன்றும் தேனும்பாலும் கன்னலுமமுதுமாகவேயிருக்கும். எனது இரு குமாரர்த்திகளின் விவாஹத்தையும் அவர்களே முன்னின்று தமது பொறுப்பில் நடத்திவைத்தவர்கள். "யானும் தானாயொழிந்தானே" என்ற திருவாய்மொழிப் பாசுரமே நினைவுக்கு வருகின்றது.

நான் சென்னையிலேயே வந்திருந்து உபந்யாஸங்கள் நடத்த வேணுமென்று அடிக்கடி யெழுதுவர். நேரிலுங் கோருவர். வெகுநாள்வரை அதற்கு இசையாமலேயிருந்தேன். அப்ரதிஹத பகவத்ஸங்கல்பத்தினால் 1931-ஆம் வருடம் ஜூலைமாதத்தில் உடன்பட நேர்ந்தது. வாரந்தோறும் சகோதரர்களிருவரும் கார் கொண்டுவந்து அழைத்துப்போவர்கள். மாதத்தில் நான்கு வாரங்களில் ஏதேனுமொரு வாரத்தை காஞ்சீ மஹோத்ஸவார்த்தமாக விடுமுறையாக்கி மற்ற மூன்று வாரங்களில் சனிக்கிழமை மாலைகளிலும் ஞாயிறு காலைகளிலும் அவிச்சின்னமாக இருபத்தைந்து

வருடங்கள் தங்கசாலைவீதியில் தொண்டமண்டலம் ஸ்கூல் ஹாலில் உபந்யாஸங்கள் நடந்துவர நம் **கோவிந்தசாமி ப்ரதர்ஸ்** ஏற்பாடு செய்துவைத்திருந்ததை நினைக்குங்கால் ......மேலே என்ன எழுதுவேன். திருவாய்மொழியில் *பொலிக பொலிக பதிகத்தில் *திரியுங் கலியுகம் நீங்கித் தேவர்கள் தாமும் புகுந்து, பெரியகிதயுகம்பற்றிப் பேரின்ப வெள்ளம் பெருக* என்றருளிச்செய்த பாசுரம் ஒவ்வொருவர்க்கும் நினைவுக்கு வரும்படி யானவொரு கால விசேஷம் அது. சென்னைப்பட்டணமென்றால் அருவருத்துக்கொண் டிருந்த என்மனத்திற்குப் பட்டணவாஸம் பொருந்தும்படி செய்தவர் கோவிந்தசாமி நாயுடு ப்ரதர்ஸ். இளையவரான கன்னைய நாயுடு நீண்டகாலம் வாழவேணும்.

இவ்விரு சகோதரர்களுக்கும் *நல்லபதத்தால் மனைவாழ்வர்* என்கிற ஆழ்வார் மங்களாசாஸனம் பலித்து புத்ரபௌத்ரஸந்தானம் நலம் மிக்கு விளங்குவது பெரியார் களின் ஆசி. பெரியவருடைய மூத்த குமாரனை சிரஞ்சீவி இராமய்ய நாயுடுவும், இளைய வருடைய மூத்த குமாரனை சிரஞ்சீவி சுதர்சன நாயுடுவும் மிக்க மேதாவிகளாய் ஸம்பிர தாய வழிகளில் ஊக்கமுடையவர்களாய் வியாபாரத்திலும் மேன்மைபெற்றவர்களாய் விளங்கிவருவது மெச்சத்தக்கது. ... ... ... ... ❃

# ஸ்ரீமத்பரமஹம்ஸ. ஸ்ரீமதாண்டவன் திருமண்காப்பு.

இண்டியன் எக்ஸ்பிரஸ்ஸென்கிற ஆங்கில தினசரிப் பத்திரிகையில் (நேற்று ஜனவரிமீ 29ஆம் தேதியன்று வெளிவந்ததில்) ஆண்டவன் திருவுருவப்படம் பரிஷ்கார மான தென்கலைத் திருமண்காப்புடன் வெளிவந்ததை ஒரு பெரியவர் ஒரு கார்டில் அச்சிட்டு, அதன் பின்புறத்தில்

> "ஸ்ரீமதாண்டவன் திருவுருவப்படம் 29—1—68 தேதியன்று வெளிவந்த இண்டியன் எக்ஸ்ப்ரெஸ் பத்திரிகையில் இவ்விதமாக (தென்கலைத் திருமண்காப்புடன்) பிரசுரமாகி நாடெங்கும் பரவியுள்ளது. ஸ்ரீ நிகமாந்த மகாகுருவின் ஏழாவது நூற்றாண்டு விழாக் கொண்டாட்டத்திற்கு நீடூழி ஞாபகச் சின்னமாக இது எம்பெருமானுடைய ஸங்கல் பத்தாலும் தேசிகனுடைய திருவுள்ளத்தாலும் நிகழ்ந்ததத்தனையேயன்றி வேறொன்றும் சொல்வதற்கில்லை. ஸ்ரீமதாண்டவன் ஸாதிப்பதுமிதுவே."

என்று அச்சிட்டு வெளியிட்டார். இங்ஙனம் அச்சிட்டது நம்முடைய காரியமென்று நினைத்த பலர் அது நம்மிடமிருப்பதாகவெண்ணி அதையனுப்புமாறு எழுதிவருகிறார்கள். இது நம்மிடமில்லை. இதன் ஸமாசாரமென்னவென்றால், சென்ற தைமாதத்தில் திருவிந்தளூரில் நடந்த ஸம்ப்ரோக்ஷண ஸமயத்தில் மேலே குறிப்பிட்ட இண்டியன் எக்ஸ்பிரஸ் வெளிவந்து உலகம் பரவியிருந்தது. அதில் ஆண்டவன் திருமேனி காஷா யத்தினாலோ கௌசேயத்தினாலோ பரிபூர்ணமாக ஆவ்ருதமாய் திருநெற்றிமட்டும் நிஸ்ஸந்தேஹமும் ஸுஸ்பஷ்டமுமான தென்கலைத் திருமண்காப்பினால் ஸமலங்க்ருதமாய் விளங்கிற்று. இதில் ஈச்வரேச்சையொழிய மநுஷ்யக்ருத்யம் சிறிதுமில்லை. ஸ்ரீமதாண்டவன் இவ்வாச்ரமம் புகுந்த பின்பு குன்றுமணி தங்கக்கட்டி நிதர்சனம் பேசித் தென்னாசார்ய தூஷணம் பண்ணி வருவதும், திவ்யதேசங்கள் ஸேவிக்கப்போமிடங்களில் அர்ச்சகர்களை நோக்கி 'நான் ஸேவிக்க வாகிறபோது வடகலைத் திருமண்சாத்தி ஸேவை பண்ணி வைத்தால் துட்டு காசு தருகிறேன்' என்பதுமாயிருப்பதனாலே அதற்கு எம்பெருமான்கள் சேர்ந்து செய்வித்த கிறி இது—என்று பலர் பேசிக்கொண்டார்கள் அது நமக்கு நேரில் தெரியாது. அன்னவர்களில் சிலர் அதனை அச்சிடுவித்தார்களென்றறிந்தோம். ... ❃

# திருவல்லிக்கேணியில் விவாஹ மஹோத்ஸவம்.

திருவல்லிக்கேணியில் வாழும் ஸ்ரீமதுபயவே. C. S. பார்த்தஸாரதி ஐயங்கார், B.A.,B.L., ஸ்வாமியும், புதுடில்லியில் வாழும் ஸ்ரீஉவே. A. K. ராமாநுஜாசாரியரும் ஸ்ரீ வைஷ்ணவ ஸமூஹத்தில் ப்ரஸித்தர்கள். ஸ்ரீ பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமி பல ஸம்வத்ஸரங்கள் புதுடில்லியில் உயர்ந்த பதவியில் வாழ்ந்து விச்ராந்தி பெற்றுத் திருவல்லிக்கேணியில் வந்து சேர்ந்து ஸ்ரீ பார்த்தஸாரதிஸ்வாமி தேவஸ்தானத்தில் அனேக ஸம்வத்ஸரங்கள் தர்மகர்த்ரு பதவியை வஹித்துச் சிறந்த கைங்கரியங்கள் நிர்வஹித்தவர். ஸ்ரீ A. K. ராமாநுஜாசாரியர் பல வருஷங்களாய் புதுடில்லியில் உயர்ந்த பதவியில் வாழ்வதோடு ஸம்பிரதாயத் தொண்டுகள் செய்வதிலும் ஊக்கத்தோடு முன்னணியில் நிற்பவர். இவ்விருவருடைய திருக்குமாரர்களுக்கும் 3—6—68-ல் திருவல்லிக்கேணியில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறிய காட்சி இது. மஹான்களின் மங்களாசாஸனத்திற்குரியது.



PREMA and GOPALAN — A. K NARASIMHAN, B.A., A.I.C.W.A. and VATSALA
The marriages of A. K, Narasimhan (son of Sri A. Ramanujachari of the Department of Company Affairs, N. Delhi) with Vatsala (daughter of Sri P. T. Venugopal of A. G.'s office, Hyderabad) and of C. P, Gopalan (son of C. S. Parthasarathy Iyengar, former Trustee of Sri Parthasarathy Temple, Triplicane) with Prema (daughter of Sri P. T. Venugopal) were celebrated on 3rd June 1968 at Madras.



# ஸ்ரீஉ.வே. M. ஸுதர்சனமையங்கார், மைலாப்பூர்.

ஸ்ரீ வைஷ்ணவவுலகில் ஆஸ்திகவுலகில் தார்மிகவுலகில் ஸ்ரீமான் மாடபூஷி. ஸுதர்சன மையங்கார் ஸ்வாமியை யறியாதாருண்டோ? ஏற்றக்குறைவின்றி முப்பத்தெட்டு வருஷகால மாக நான் கொண்டாடநின்ற பெரியார் இவர். ஆழ்வார்கள் எம்பெருமானை யழைக்கும் போது பல விளிகள் இடுவது காண்கிறோம். "சிந்தை தன்னுள் நீங்காதிருந்த திருவே" என்றும் "என்சிந்தனைக்கினியாய்!" என்று முள்ள இரண்டு விளிகள் என்னுடைய சிந்தனை யில் எஞ்ஞான்றும் நிற்பவை. பெரியார்களின் சிந்தனை அப்படியிருப்பதுபோல, லௌகிகர் களான நம்போல்வாருடைய சிந்தனை எம்பெருமானோடுமட்டும் நிற்பதல்லாமல் உலக வாழ்க்கைக்கிணங்கச் சிலபல வ்யக்திகளையும் ஸ்பர்சித்திருக்குமே. அப்படிப்பட்ட வ்யக்தி களில் ஸ்ரீ ஸுதர்சனமையங்காரை முற்படக் குறிப்பிடுவேன். இப்போது இக்கட்டுரைக்கு என்ன ப்ரஸக்தியென்று கேள்வி வரும். கேண்மின். விரிவாகவே தெரிவிக்கிறேன்.

சென்ற மாதத்து ஸ்ரீ ராமாநுஜனில் (234ல்) ஒரு பக்கத்தில் "ப்லவங்க மீனவிசாக கோஷ்டிகள்" என்ற மகுடத்தின்கீழ்ச் சில கோஷ்டிப் படங்கள் வெளியிடப்பட்டன வல்லவா? அதில் அடியேன் தடியையூன்றிக் கொண்டு வளைந்து நிற்கும் நிலைமை காணப் படுகிறது. இந்த ஸன்னிவேசத்தைத் தென் னாட்டினர் பலரும் [பலருமென்ன? அனைவரும்] கண்டவர்களே. மிகவும் ஆப்தர்களான சிலர் "உருவப்படத்தில் மிகவும் வ்ருத்தாப்யம் காண்கிறது" என்றெழுதினார்கள். மற்றுஞ் சிலர் "திருமேனியில் தளர்ச்சி காண்கிறது" என்றெழுதினார்கள். எல்லாருடைய கடிதங் களுக்கும் முன்னே நம் ஸுதர்சனமையங்காரு டைய விரிவான கடிதம் கிடைத்தது. அதை

வாசிக்கும்போது பரவசமாய்க் கண்ணீர் பெருகியது. அப்போது எதிரில் நாலைந்து ஆப்தர்கள் இருந்தார்கள். கிடைத்த தபாலைக்கண்டு நான் கண்ணீர் பெருக்கினபடியாலே ஏதோ துக்கஸமாசாரம் வந்து அதற்காக நான் சோகிப்பதாக நினைத்து 'என்ன என்ன?' என்று பதறி வினவினார்கள். விபரீதமொன்றுமில்லையென்று சிரித்துக்கொண்டே சொல்லி விட்டு, கடிதத்தை அவர்களுக்கு வாசித்துக்காட்டத் தொடங்கினேன் *உள்ளெலா முருகிக் குரல்தழுத்தொழிந்தேன் உடம்பெலாம் கண்ணநீர்சோர* என்னும் நிலைமையை யடைந்தேன். அக்கடிதத்திலுள்ள சில வாக்கியங்களை ஆப்தர்கள் காண இங்கு உதாஹரிக்கிறேன்;—

"தேவரீரது ஜூன்மாத ஸ்ரீ ராமாநுஜன் பத்ரிகை இன்று கிடைத்தது. அதில் எட்டாம் பக்கத்தில் ப்லவங்க மீனவிசாக கோஷ்டிகளின் காட்சிகள் என்னும் தலைப்பின் கீழுள்ள போட்டோக்களைக் கண்டேன். தேவரீர் கைத்தடியின்மேல் இரு கைகளையும் ஊன்றி சற்று முன்வளைந்தவாறு காண்கிறது. தேவரீர் எப்போதும் நிமிர்ந்தவாறே யிருப்பதுகண்ட அடியேனுக்கு இந்தத் தோற்றம் சிந்தனைக்குக் காரணமாயிற்று. ஏதேனும் தாற்காலிகமாக ஏற்பட்ட வாய்வுப் பிடிப்பினாலா? அல்லது விருத்தாப்யத்தினாலா என்பது தெரியவில்லை. கிருபை செய்து தெரிவிக்கப் பிரார்த்திக்கிறேன். ஸத்விஷயங்களை அனவரதமும் பிரசுரித்தும் பிரசங்கித்தும் வரும் தேவரீரது தொண்டு நீடூழி சேதனர்களுக்குக் கிடைத்துவரும்படி செய்ய வேண்டியது பேரருளாளனுடைய கடமை. தேவரீருக்கு தாற்காலிக அசக்தம் இருந்தபோதிலும் அதனைப் போக்கித் திடமான ஆரோக்யம் தந்தருளும்படி பெருந்தேவி நாயிகாஸமேத ஸ்ரீ தேவாதிராஜனை ப்ரார்த்தித்தபடியே யிருக்கிறேன்.

(Sd.) M. ஸுதர்சனதாஸன்."

பவபூதி மஹாகவி உத்தரராமசரித நாடகமியற்றினார்; அதைக் கண்டு காளிதாஸ மஹாகவியும் "உத்தரே ராமசரிதே பவபூதிர் விசிஷ்யதே" என்று கொண்டாடினாரென்று ப்ரஸித்தி. அதில் சக்ரவர்த்தி திருமகன் சொல்லுவதாக அமைத்த இரண்டு சுலோகங்கள் கேளீர். (1) *ஜீவத்ஸு தாதபாதேஷு நூதநே தாரஸங்க்ரஹே, மாத்ருபிச் சிந்த்யமாநாநாம் தே ஹி நோ திவஸா கதா:.* இந்த சுலோகத்தின் கருத்தாவது, அப்பா பிழைத்திருக்கிற காலம்; ஸீதா விவாஹமான புதியகாலம்; தாய்மார்களுடைய சிந்தனையில் வளர்ந்த காலம். அப்பப்ப! அப்படிப்பட்ட நாட்களல்லவோ நாட்கள்; அந்த நாட்களெல்லாம் கடந்துபோயினவே! அந்நாட்கள் திரும்பிவரப் போகின்றனவோ!

(2) *ஸ்மரஸி ஸுதநு! தஸ்மிந் பர்வதே லக்ஷ்மணேந ப்ரதிவிஹிதஸபர்யா ஸுஸ்தயோஸ் தாந்யஹாநி, ஸ்மரஸி ஸரஸநீராம் தத்ர கோதாவரீம் வா ஸ்மரஸி ச தததுபாந்தேஷு ஆவயோர் வர்த்தநாநி?* இந்த சுலோகம் பெருமாள் (கர்ப்பிணியான) பிராட்டியை நோக்கிச் சொல்லுவது. ஸீதே! ப்ரஸ்ரவணகிரியில் தம்பி லக்ஷ்மணன் உபசாரங்கள் பண்ணப் பாங்குடனிருந்த அந்நாட்கள் நினைவுக்கு வருகிறதா? கோதாவரியின் நீர்வாய்ப்பு நினைவுக்கு வருகிறதா? அந்த நதீப்ராந்தங்களில் நாமிருந்த இருப்பெல்லாம் நினைவுக்கு வருகிறதா? என்று கேட்பதன் கருத்து என்ன? 'ஆமாம், ஆமாம், நினைவுக்கு வருகிறது' என்று பிராட்டி விடை கூறவேணுமென்றெண்ணிக் கேட்கிறபடியன்று; *வைதேஹி ரமஸே கச்சித் சித்ரகூடே மயாஸஹ* என்றாப்போலே இதுவொரு ஆனந்த

பரீவாஹமான வார்த்தைப்பாடு. அனுபவத்தின் இனிமைகளை நினைக்கும்போது *ஊற்றின் கண் நுண்மணல்போல் உருகாநிற்பர் நீராயே* என்றுப்போலே உருகாமலிருக்க முடியாதன்றோ. அந்த உருக்கமே கேள்வியாகப் பரிணமிக்கிறபடி.

நமது ஸுதர்சனமையங்கார் தமது பொன்னுன கடிதத்தில் எழுதியிருந்த மேலே உதாஹரித்த வார்த்தைகளுக்காகவே எனக்குக் கண்ணீர் பெருகியதன்று. அந்தக் கடிதத்திலிருந்து பழைய அநுபவங்கள் பலபலவும் நினைவுக்குவந்து தாங்கமுடியாத நிலைமை ஏற்பட்டது. பதினைந்து வருடங்களுக்குமுன் நான் வெளியிட்டிருந்த தன்சரிதையான என் சரிதையில் இவர்களைப்பற்றி வெளியிட்டிருக்கின்ற சில வரிகளை இங்கு உதாஹரிக்கின்றேன்.

"சென்னையில் M. D. ப்ரதர்ஸ் என்று ப்ரஸித்தி பெற்ற ஸஹோதரர் நால்வர் மஹா ரஸிகர்கள். இவர்கள் முறையே துரைஸாமி ஐயங்கார், சக்ரவர்த்தி ஐயங்கார், சேஷாத்ரி ஐயங்கார், ஸுதர்சநமையங்கார் என்பவர்கள். சென்னையில் அடியேனுடைய உபந்யாஸம் ஆரம்பித்த காலத்தில் இவர்கள் நால்வரும் ஏக குடும்பமாக வாழ்ந்தவர்களாதலால் நால்வரும் ஸகுடும்பமாக உபந்யாஸங்களுக்குத் தவறுது வருவதும், தத்தம் ஸ்நேஹிதர்கள் பலரையும் அந்வயிக்கச் செய்வதுமாயிருந்து அந்த உபன்யாஸ ஸபையை மிகவும் அபிவிருத்திக்குக் கொண்டுவந்தார்கள். இவர்களில் தலைவரான துரைஸாமி ஐயங்காரென்பவர் இரண்டு மூன்று வருஷ காலத்தில் ஆசாரியன் திருவடியடைந்து விட்டார். பிறகு மற்ற மூவரும் பதினைந்து வருஷ காலம் ஐகமத்யத்தில் குறைவின்றி வாழ்ந்துவந்தபடியால் இவர்களுக்குள் விபாகம் ஏற்படுகிற வரையில் அந்த ஸபையை விசேஷமாக அபிமானித்து ஆதரித்து வந்தார்கள். ஸர்வகநிஷ்டரான ஸ்ரீ ஸுதர்சனம் அய்யங்கார் ஸ்வாமி மஹாமேதாவியும் பரம ரஸிகருமாகையாலே இற்றைக்கும் ஸபையில் அபிமானத்தை விடாமல் பாதுகாத்து வருபவர். அடியேன் உபந்யாஸார்த்தமாகச் சென்னைக்குச் சென்று சில மாதங்கள் வரையில் விடுதி விடுதியாகச் சில உபந்யாஸங்கள் நடத்தப்பட்டு வந்தன. பிறகு, ஸ்ரீ ராமாயணம் போன்ற பெரிய க்ரந்தமொன்று தொடங்க வேணுமென்று ஸபையார் கோரியிருந்த காலத்தில் இந்த உபந்யாஸ நிர்ப்பந்தத்தில் நின்றும் விலகிக்கொள்ள வேணுமென்கிற எண்ணமுண்டாயிற் றடியேனுக்கு. ஏனென்றால், இளமை தொடங்கியே அடியேன் பேரருளாளனுடைய அநுபவத்தில் பழுத்தவனுகையாலே, சென்னை நகரப் போக்குவரத்து அதற்கு மிகவும் இடையூறுயிருப்பதையும் அனேக மஹோத்ஸவங்களை யிழக்க நேருவதையும் நோக்கி இந்த நிர்ப்பந்தத்திலிருந்து விலகிக்கொள்ள விருப்பமுண்டாயிற்று. அந்த ஸமயத்தில் சில மஹான்கள் முன்னின்று "இந்த உபந்யாஸக்ரமங்கள் நீண்டகாலம் நடந்து வரவேண்டும்; முதலிலே இங்கு எழுந்தருளாமலேயிருந்தால் இப்போது எங்கள் கோரிக்கைக்கு ப்ரஸக்தியேயிராது; சில மாதங்கள் ருசிகாட்டியான பிறகு இனி இடையில் விலகிக்கொள்வது தகவே தகாது" என்று வற்புறுத்தி உபந்யாஸங்கள் தொடர்ந்து நடந்துவரச் செய்தார்கள். அப்படிப்பட்டவர்களில் மேலே குறித்த ஸ்ரீ ஸுதர்சனமையங்கார் முன்னணியில் நின்றவர். ஸ்ரீகாஞ்சியில் நம்பிள்ளை ஸன்னிதி ப்ரதிஷ்டாபனம் முதலான அபூர்வ விலக்ஷண க்ருத்ய விசேஷங்கள் நடைபெற வேண்டிய பகவத் ஸங்கல்பமிருந்தபடியாலே அடியேனும் அதற்கு உடன்படலாயிற்று"* (என்பது, தன் சரிதையிலெழுதியது.)

நண்பர்களே! இக்கட்டுரை 1955ல் எழுதினதாகையாலே பதின்மூன்று ஆண்டுகள் கடந்திருக்கின்றன. அப்போது நம்முடைய உபந்யாஸ ஸ்தலமும் மாற்ற நேர்ந்தது. உபந்யாஸ ஸபையும் மாறிற்று. அந்த விரிவுகள் இங்கே அப்ரஸக்தம். நம் சுதர்சனமையங்கார் இடையில் நோய்வாய்ப்பட்டு பிரபல சிகித்ஸைகளினால் நோய்தீர்ந்து இந்நிலவுலகத்துக்குத் திலகபூதராயிருந்துகொண்டு, ஸ்ரீவைஷ்ணவ ப்ராஹ்மணதனிகர்கள் செய்ததாக இதுவரையில் நாம் கேட்டிராத பலபல தரும காரியங்களைச் செய்து வருவது மட்டுமல்லாமல் அவை சாச்வதமாக நடந்துவரும்படியான Trustம் ஏற்பாடு செய்திருக்கிறார். இப்போது கிடைத்த ஸுதர்சனமையங்கார் கடிதத்திற்கு ஸாமான்யமாக நன்றி பாராட்டி பதிலெழுத வேண்டியிருந்தபடியால் ஏதோ ஸ்வல்பம் எழுதினேன். அதற்கு அவர் அன்புவெள்ளம் ததும்ப மிகநீண்ட பதில் கடிதமெழுதுகையில்,

> "அடியேன் அடியேனுடைய ப்ராதாக்களுடன் சேர்ந்து பதினாறாண்டுகட்கு மேலாகத் தொடர்ந்தாற்போல் தொண்டைமண்டலம் ஸ்கூல் ஹாலில் தேவரீருடைய அமுதமன்ன திருவாக்கிலிருந்து திருப்பாவை, ஸ்ரீராமாயணம், பகவத்கீதை பகவத் விஷயம் ஸ்ரீ பாகவதம் ச்ரவணித்தது இற்றைக்கும் அடியேனது செவிகளில் ரீங்காரம் செய்துகொண்டுள்ளதென்பதைப் பெருமையுடன் விண்ணப்பித்துக் கொள்ளுகிறேன்."

என்றெழுதியுள்ள அமுதமென் மொழிகள் என்னைப் படுத்தும்பாடு எழுதத் தரமன்று. "தே ஹி நோ திவஸா கதா:" என்று கீழேயுதாஹரித்த பவபூதி மஹா கவியின் சுலோகம் ஸம்ஸார வாழ்க்கையினர்க்குப் பெரும்பாலும் நினைவுக்கு வரக்கூடியதே. இந்த சுலோகம் தெரியாதவர்களும் இதன் பொருள் கொண்ட வார்த்தையைச் சந்தர்ப்ப விசேஷங்களில் சொல்லாதிருப்பதில்லை. ஆக இது ஸர்வஸாதாரண வார்த்தையேயெனினும் என்வரையில் அஸாதாரணமென்றே நினைக்கலாயிருக்கும்.

மேலேயுதாஹரித்த ஸுதர்சனமையங்கார் வார்த்தைகளில் **"தொடர்ந்தாற்போல்"** என்றொரு வாசகமுள்ளதே. அதன் பொருளை நான் விவரிக்க வேண்டாமா? "ஒரு நாள் ஆப்ஸண்டு இல்லாமலும் லேட் இல்லாமலும்" என்பது அதன் பொருள். சில வருஷங்களில் ப்ரதர்ஸ் நால்வரும், பல வருஷங்களில் மூவருமாய்க் கொண்டு கோஷ்டியில் அந்வயிக்குமழகும் வீற்றிருக்கும் வீறும், அர்த்தங்களை ரஸிக்கும் பண்பும் நினைக்கப் புகின் என்ன சொல்லுவது? **தே ஹி நோ திவஸா கதா:** என்பது தவிர வேறென்ன சொல்லுவது?

சென்னையில் இவர்கள் ஸாமான்ய மனிதர்களல்லர்; மிகப் பெரியோர். எத்தனை ஜோலிகளிருக்குமிவர்களுக்கு! **நிவ்ருத்தாந்யஸமாரம்பா:** என்னும்படியிருந்த அதிசயம் அதிசயங்களுக்குள் மேலானது. ஒரு நாள் உபந்யாஸத்தில் "யத்ர நாந்யத் பச்யதி நாந்யத் ச்ருணோதி நாந்யத் விஜாநாதி, ஸ பூமா" என்கிற உபநிஷத்வாக்யத்தையெடுத்து விவரிக்கிறேன்; அப்போது *ஆஹ்லாதசீதநேத்ராம்பு: புலகீக்ருதகாத்ரவான்* என்னும் படியாயிருந்த ஸுதர்சனமையங்கார் "அப்படிப்பட்ட பூமா இந்தவுபந்யாஸந்தான்" என்கிறார்; அன்று அதற்குமேல் என்னால் ஒன்றும் பேசமுடியவில்லை; ஏதோ சில வார்த்தைகளைப் பேசி முடித்துக்கொண்டேன். அவரும் 'இன்று அடியேனுடைய

அதிகப்ரசங்கமே உபந்யாஸத்தடையானுப் போலிருக்கிறதே' என்று சொல்லிக்கொண்டே யெழுந்தார்.

இங்ஙனே நினைவுக்கு வருவன ஒன்றிரண்டல்ல; பத்தெட்டுமல்ல *ஸங்க்யா துும் நைவ சக்யந்தே* என்னுமித்தனை. இதெல்லாம் ஸ்வப்ரதிஷ்டைக்கும் ஸ்வப்ரசம்ஸைக்குமாக எழுதுவது என்று சிலரோ பலரோ நினைத்தாலும் நினைக்க. அவரவர்கள் தம்தம் ஸங்கடத்தையோ ஸந்தோஷத்தையோ ப்ராப்த ஸமயங்களில் வெளியிட்டுக் கொள்ள உரிமை பெற்றிருக்கவில்லையா? உலக வாழ்க்கையில் எம்பெருமான் ஸம்ஸாரிகளுக்கு ஸுக துக்கங்களை மாறிமாறி விளைப்பது ஸஹஜம். திருவாய்மொழியில் ஆழ்வார் *ஒருநாயகப் பதிகத்தில் நிலவுலகமாளும் பிரபுக்களைப்பற்றி *வாழ்ந்தார்கள் வாழ்ந்தே நிற்பரென்பதில்லை* என்றருளிச் செய்தது ஆப்ரஹ்மகீடம் பொதுவானதே. உத்தரராம சரிதத்தில் ''து:க்கஸம்வேதநாயைவ ராமே சைதந்ய மாஹிதம்'' என்று பெருமாள் தம் திருவாக்காலே சொல்லிக்கொண்டதாக மஹாகவி வாக்விந்யாஸம் செய்திருக்கிறார். நம்போல்வார்க்கு நேரும் துக்க ஸம்பவங்களைப்பற்றிக் கேட்க வேணுமோ? ஆனாலும் என்வரையில் நம் ஸுதர்சனமையங்கார்போல்வாரான அக்ருத்ரிமப்ரேமயுக்தர்களும் ரஸிகர்களுமான ஆப்தர்களை நினைக்கும்போதே எந்த துக்கங்களும் மறைந்து உள்ளமுள்குளிரும்வகை நெஞ்சால் நினைப்பரிதே.

பல சொல்லி யென்? அந்த உபந்யாஸஸபையில் ஸுதர்சனமையங்கார் அங்வயித்திருந்திலரென்றால் அந்த ஸபை சில மாதங்கள்கூட நடந்திராது. எனக்கும், சொல்லுவதற்கு விஷயங்கள் ஸ்புரித்திராதென்பது நாபியிலிருந்து சொல்லும் வார்த்தை. அந்த ஸபைக்கு M. D. Bros. Sabha என்றே ப்ரஸித்தி ஏற்பட்டு விட்டது. முடிவாக ஒன்று சொல்லி நிற்கிறேன். வேதாந்ததேசிகன் ஸங்கல்பஸூர்யோதயத்தில் ''நிரவதிகுணக்ராமே ராமே'' என்று தொடங்கும் சுலோகத்தை ''பரிமிதகுணே ஸ்பஷ்டாவத்யே முதா கிமுதாஸதே?'' என்று தலைக்கட்டுகிறார். இதன் கருத்து— நிரவதிக கல்யாண குணகண நிதியான சக்ரவர்த்தி திருமகனிடத்திலேயே இன்றைக்கும் நாளைக்கும் உலகம் குற்றங்குறைகளைக் கூறுநிற்க, மிகவும் பரிமிதமான குணங்கொண்டு தோஷபூயிஷ்டர்களாயிருக்கும் நம்போல்வாரிடத்தில் உலகம் வாளாவிருக்குமோ? என்பதாம். உண்மையில் குற்றங்குறைகள் பல கொண்ட அடியேனைப்பற்றி இந்த ப்ரதர்ஸ் நால்வரிடத்தும் மதிபேதமுண்டாக்குகைக்காக அவரவர்கள் எடுத்துரைத்த குற்றங்குறைகள் ஒருகாலிருகாலன்று. இதற்காகச் சிபார்சுகள் கொண்டாரும் பலருளர். *கிரயோ வர்ஷதாராபிர் ஹந்யமாநா ந விவ்யது:* என்றிருந்த இவர்களின் தன்மை மற்றையோர்க்கு அனுகரிக்கவும் முடியாதது.

''அம்மாள் கோஷ்டியில் ஸுதர்சனபட்டர் விளங்கியதுபோல் அண்ணு கோஷ்டியில் ஸுதர்சனமையங்கார் விளங்குகின்றார்'' என்று அக்காலத்தில் ஏககண்டமாகச் சொன்னவர்கள் ஆயிரவர்.

# பிறந்தால் வாழைபோலப் பிறக்கவேணும்.

ஒரு ஸ்வாமி அடிக்கடி சொல்லுவர் "பிறந்தால் வாழைபோலப் பிறக்கவேணும்" என்று. இதன் கருத்தை ஒரு ஸமயம் அவரையே கேட்டுத் தெரிந்துகொள்ளலாயிற்று. உலகில் ஒவ்வொரு மரத்திலும் பலபல வுறுப்புக்கள் உள்ளன. அவற்றில் எல்லாமும் நமக்கு உபயோகப்படுவனவென்று சொல்ல முடியாது. உபயோகப்படாதவுறுப்புக்களும் பல காண்போம். வாழைமரத்தின் உறுப்புக்களை ஊன்றிப் பார்க்கையில் வாழைக்காய் வாழைப்பழம் வாழைப்பிஞ்சு வாழைப்பூ வாழையிலை வாழைப்பட்டை வாழைத்தண்டு வாழைக்கிழங்கு வாழைக்குருத்து......என்று எந்த வுறுப்பைப் பார்த்தாலும் இவற்றில் உபயோகப்படாததென்று கழிக்கக்கூடியது ஏதேனுமுண்டாவென்று விமர்சித்தால் அப்படிப்பட்டது ஒன்றுகூடத் தேறவில்லை. ஒவ்வொருவரும் ஒவ்வொரு நாளும் தேடக்கூடிய வஸ்துக்களே இவை. இவையெல்லாம் சேர்ந்து கலியாணப் பந்தலுக்கு உபயோகப்படுவது மிக விசேஷம். கடைசியாக வாழைநார்கூட கழிக்கப்படுவதில்லை. "பூவோடு நாரும் மணம்பெற்றது" என்னும்படியாக அதுவுமன்றோ மணம்பெறுகின்றது; இவையெல்லாவற்றுக்கும் மேலாக, தானே பரிவாரங்களைப்படைத்துக்கொண்டு ஸபரிவாரமாகக் காட்சி தருவது மிக விசேஷம். இவ்வுறுப்புக்களில் ஏகதேசமும் தனித்தனி விரும்பப்படுவதும் விற்கப்படுவதும் காண்கிறோம். இவ்விசேஷங்களை ஒருவர் எடுத்துக் காட்டினபின்பே நன்கு உணரப்பெறுகிறோம். "பிறந்தால் வாழைபோலப் பிறக்கவேணும்" என்ற மஹானுடைய உக்திசாதுர்யம் மிக ரஸிக்கத்தக்கதாயிற்று. நம்முடைய கரணக்ராமங்களெல்லாம் இங்ஙனே பரோபயோகியாகவேணுமே, எப்படியாகும்? ஆகவேணுமென்கிற மனோரதமாவது இருந்தால் போதும். ... ... ❁

# ஸ்ரீ ஸுதர்சந சதகம்

ஸ்ரக்தரா விருத்தத்தில் நூறு சுலோகங்கள் கொண்ட ஸுதர்சநசதக ஸ்துதியைக் கேள்விப்படாதாரில்லை. காம்யார்த்திகள் பலர் இதனைப் பாராயணம் செய்வது எங்குமுண்டு. இதில் ஒவ்வொரு சுலோகத்திலும் "வ:, யுஷ்மாகம், பவதாம்" என்று முன்னிலையாக வருவதால் ஸ்வார்த்தமாகவன்றிக்கே பரார்த்தமாகவே இதனைப் பாராயணம் செய்யவேணுமென்பது தெரியவருகின்றது. இதனை யருளிச்செய்தவர் ஸ்ரீகூரநாராயண ஜீயர் என்பவர். அவர் கூரத்தாழ்வானுடைய திருவடிகளில் ஆச்ரயித்திருந்தவர். கோயிலில் ஸ்ரீரங்க நாராயணஜீயருடைய ஆஸ்தானத்தையும் அலங்கரித்திருந்தவர் என்பது கோயிலொழுகினால் தெரியவருகின்றது. இவர் ப்ரசண்ட பண்டிதோத்தமர் என்பது தவிர, மஹாகவிகளில் நிகரற்றவர். கவிதையில் கூரத்தாழ்வான் பட்டர் முதலானவரையும் அதிசயித்தவரென்றால் மிகையாகாது. இவ்வளவு சப்தகாம்பீர்யமும் அர்த்தபுஷ்டியுமுள்ள கவிதை வேறில்லையென்று சபதமிட்டுரைக்கலாம்.

இந்த ஸ்துதிநூலை இவ்வாசிரியர் இயற்றுவதன் காரணம் இதற்குத் தனியனாக அமைந்துள்ள சுலோகத்தினால் ஸ்பஷ்டமாகத் தெரியவருகின்றது. *ரங்கேச விஜ்ஞப்தி

கராமயஸ்ய சகார சக்ரேசநுதிம் நிவ்ருத்தயே, ஸமாச்ரயேஹம் வரபூரணீம் யஸ் தம் கூரநாராயண நாமகம் முநிம்.* என்பது தனியனுக அநுஸந்திக்கப்படும் சுலோகம். திருவரங்கப் பெருமாளரையருடைய நோய் தீருவதற்காக இந்த ஸ்துதி நூல் இயற்றப் பட்டதாக இந்த சுலோகத்தினுல் தெரிவிக்கப்படுகிறது. இவ்வாசிரியர் கூரத்தாழ்வானுடைய திருவடிநிழலில் வாழ்ந்தகாலத்தில் இவர் மந்த்ரசாஸ்த்ரங்களில் விசேஷப் பற்றுடையவராயிருந்தாராம். ஒருநாள் ஆழ்வான் இவரை நோக்கி "ப்ரபந்ந ஸந்தானஸ்தர்களான நமக்கு திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரமொழிய வேறு புகலில்லை காணும்" என்றருளிச்செய்ய 'ஸமயத்தில் இவையும் பயன்படும்' என்று சொல்லிவைத்தாராம்.

ஒரு ஸமயம் திருவரங்கப்பெருமாளரையர் மஹத்தானவொரு வியாதியினுல் அபிபூதராய் பகவத்கைங்கர்யத்திற்கு அநர்ஹராய் மிகவும் சிரமப்பட்டிருக்க, அப்போது ஆழ்வான் இவரை நோக்கி 'இவையும் ஸமயத்தில் பயன்படுமென்று சொல்லியிருந்தீரே, இப்போது பயன்பெறுவிக்கலாகுமோ?' என்றருளிச்செய்ய, அப்போது இந்த கூரநாராயண ஸ்வாமி இந்த ஸுதர்சநசதகத்தைப்பணித்து அங்கு ஸ்ரீஸுதர்சனுழ்வான் ஸன்னிதியில் யோக்ய புருஷர்களைக்கொண்டு பாராயணம் செய்விக்க, அரையர் விரைவிலேயே நோய் தீர்ந்து பண்டுபோல் கைங்கரியத்தில் அந்வயிக்க, ஆழ்வான் போரவுகந்தருளினுர் என்று இவ்வளவும் கோயிலொழுகினுல் தெரிய வருவதாம்.

இதில் ஒவ்வொரு சுலோகத்திலும் ஒவ்வொரு பலன் கூறப்படுவது மிக விலக்ஷணமாயிருக்கும். ஒரு சுலோகத்தில் ***ஹந்து தந்த்ராலுதாம் வ:*** என்கிருர். உங்களுடைய சோம்பல் தொலையக் கடவதென்றபடி. சோம்பல் தொலைவதற்கும் ஒரு வரப்ரஸாதம் வேண்டும்போலும். இன்னெரு சுலோகத்தில் "வித்தகோடீ கோடீரச்சத்ரபீடீ கடக கரி கடா சாமரஸ்ரக்விணீம் விபுதாவிஸ்த்ருதிம் வ: விதரது" என்கிருர். இது, பெரிய திருமொழியில் "கண்டார் வணங்கக் களியானை மீதே கடல் சூழுலகுக்கொரு காவலராய், விண்டோய் நெடுவெண்குடை நீழலின்கீழ் விரிநீருலகாண்டு" என்ற பலச்ருதியை அடியொற்றியது. மற்றொரு சுலோகத்தில் "ஸங்க்யாவத் ஸங்கசித்த ச்ரவணஹர குணஸ்யந்தி ஸந்தர்ப்ப கர்ப்பாம் மதிம் வ: தத்தாம்" என்கிருர். ஆசிரியர் தம்முடைய வாக்குப்போன்ற வாக்கு பிறர்க்கும் ஸித்திக்க வேணுமென்று ஆசாஸிக்கிருர்.

இப்படி ஸகல பலன்களையும் அளிக்க வல்லதாக அமைக்கப்பட்ட இத்தச் சிறந்த ஸ்துதிநூல் அப்ரதிம வாங்மயமாக அமைந்துள்ளது. இதற்குப் பல வருடங்களுக்குமுன்பு அடியேன் மணிப்ரவாள வியாக்கியானமெழுதப் பல பெரியோர்களால் நியமிக்கப்பட்டேன். உண்மையில் வெகு சிரமப்பட்டுத்தானெழுதினேன். ஒரு நாளைக்கு இரண்டொரு சுலோகங்களின் வியாக்கியானமேயெழுத முடிந்தது. கீழே ப்ரஸ்தாவித்த கோவிந்தசாமி நாயுடுவின் பதிப்பில் இதுவும் சேர்ந்தது. இது அச்சாகி வெளிவந்தபோது அஸ்மதாசார்யரான ஸ்ரீ ஜகத்குரு காதி ஸ்வாமி எழுந்தருளியிருந்தார். கடாக்ஷித்தருளி "பஞ்சஸ்தவ ஸ்ரீரங்கராஜ ஸ்தவாதிகளுக்கு நீ வியாக்கியானமெழுதினது பெரிதன்று; இதற்கு வியாக்கியானமெழுதினது மிக வியக்கத்தக்கது" என்றருளிச்செய்தார். உடனே அடியேன் விண்ணப்பம் செய்தேன்—"ஸத்யம் சபே; இது அடியேனுல் எழுத முடியாதது; உண்மையில் அடியேனெழுதியதுமன்று; ஸ்வாமியின் திருவெழுத்தே"

என்று. இவ்விஷயத்தை அந்த வியாக்கியான முடிவில் இரண்டு சுலோகங்களாக அமைத்திருக்கின்றேன்.

இந்த வியாக்கியானம் மூன்று பதிப்பாகியும் நாலைந்து வருஷமாகப் புஸ்தகம் துர்லபமாயிற்று. நான்காவது பதிப்பாக இப்போது புநர்முத்ரணம் நடைபெற்று வருகின்றது. தேவநாகரியும் தமிழும் கலந்து நடைபெறுங் காரியமாதலால் அச்சுக் கூடத்தில் அச்சுத் தாமதம் ஏற்படுகிறது. அபேக்ஷகர்கள் பலர்க்கு நாம் பதில் எழுத முடியாமலிருக்கிறது. இரண்டொரு மாதமாய்ச் சிறிது வேகமாக முத்ரணம் நடந்து வருவதால் ஐப்பசி மாதத்திற்குள் புத்தகம் ஸித்தமாகுமென்று விஜ்ஞாபித்து நிற்கிறேன்.

# கடியாரம்போல் நாமிருக்க இயலுமா?

பண்டைக்காலத்தில் இல்லாத பலபல இயந்திரங்கள் அற்புதமாக ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. கண்டவளவில் கண்தெறிக்கும்படியான பிரபலயந்திரங்கள் கிடக்கட்டும். தினப்படியாக ஒவ்வொருவரும் உபயோகங்கொள்ளும்படியான ஒரு சிறு யந்திரத்தைப்பற்றி என்மனத்தில் தோற்றின ஆச்சரியத்தை யெழுதுகிறேன். டயம்பீஸ் இல்லாத க்ருஹமே யிராது. இதை உற்று நோக்குங்கள். இதில் நாலு முள்ளு அமைக்கப் பட்டிருக்கிறது. ஒரு முள்ளு ஒரு மணி காலத்தில் ஒரு லக்கத்தை விட்டு அடுத்த லக்கத்திற்கு வந்து சேருகிறது. இந்த முள்ளு இக்காரியத்தை ஏற்றத்தாழ்வில்லாமல் செய்துவருகின்றது. மற்றொரு முள்ளு அந்த ஒரு மணி காலத்தில் பன்னிரண்டு லக்கங்களைச் சுற்றிவரும்படியான கட்டளை பெற்று அப்படியே சுற்றி வருகின்றது. இதிலும் ஏற்றத்தாழ்வு கிடையாது. இன்னொரு முள்ளுக்கு என்ன கட்டளையென்றால், அறுபது சிறு கோடுகளிட்டு 'ஒரு மினிட்டில் இத்தனை கோடுகளையும் நீ தாண்டி தலையிடத்தில் நிற்க வேணுமென்று கட்டளை. அதுவும் அப்படியே நிறைவேற்றுகிறது. இன்னுமொரு முள்ளு செய்யும் பணியோ வெகு ஆச்சரியமானது. அந்த முள்ளை ஒரு லக்கத்திலே நிறுத்தி வைத்து இந்த எண்ணுள்ள மணி அடிக்கும்போது என்னை நீ தட்டியெழுப்பவேணு மென்றால், இரவு ஒரு மணியோ இரண்டு மணியோ இரண்டரையேவிசம் மணியோ எந்த மணிக்குக் கட்டளையிட்டு வைத்தாலும் அதே மணிக்கு நாம் அலறியெழுந்திருக்கும்படி நம்மைத் தட்டியெழுப்புகின்றது. மேலே சொன்ன காரியங்களை ஒரு மனிதன் வழுவறச் செய்வனோ? ஒரு நாளைக்காவது செய்வனோ?

56 வருடங்களுக்குமுன்பு 45 ரூ. கொடுத்து ஒரு பெரிய கடியாரம் வாங்கினேன். அதன் பிறகு அதற்கு ஒரு நாள்கூட ஆயில் தடவினதுமில்லை. 5 நாள் 8 நாள் வெளியூர் போக நேர்ந்தால் சாவி கொடுத்துவிட்டுச் சென்று எட்டாநாள் திரும்பினால் தன் கடமையை வழுவறச் செலுத்திக்கொண்டிருக்குமேயல்லது 'வீடு பூட்டியிருக்கிறதே, வாசலில் சேவகன் தூங்குகிறானே, நாமும் தூங்குவோமே' என்று கிடப்பதில்லை. அந்த நிலைமையைப் பார்க்கும்போது 'இப்படியொரு பணிவிடைக்காரன் நமக்குக் கிடைக்க மாட்டானோ?' என்று தோன்றும். இதைப்பற்றி ஒரு பெரியாரைக் கேட்டேன். 'அசேதநமாகப் பிறந்தாலொழிய இத்தகைய பாரதந்திரியம் வாய்க்காது' என்றார். ஆகவேதான் ஆசாரியர்கள் அசித்வத் பாரதந்திரியம் என்கிறார்கள் என்றெண்ணினேன். உலகில் எத்தனை கோடி கடியாரங்களுண்டோ அத்தனையும் க்ருதஸங்கேதம்போல் ஒரே ரீதியாய் நடப்பதும் பெரிய அதிசயமல்லவா? ... ... ...

# எழுபத்தேழு பெரியார்களின் பெருமை.

## 59. ஸ்ரீமதுபயவே. உத்தரமேரூர் கனபாடி. ராகவாசார்ய ஸ்வாமி

உத்தரமேரூர் என்பது காஞ்சீபுர ஸமீபத்திலுள்ள வொரு திவ்யஸ்தலம். இவ்விடத்தில் வெகு நாளாகவே வேதவித்துக்களும் வித்வான்களும் விளங்கி வருகிறார்கள். ஸம்ஸ்க்ருத பாண்டித்யமும் வேதாத்யயநஸம்பத்தும் ஸாமாநாதி கரண்யம் பெறுவது அபூர்வமல்லவா? மேலே குறித்த ராகவாசார்ய ஸ்வாமி யிடத்தில் அந்த ஸாமாநாதிகரண்யம் விஸ்மயநீயமாகவே யிருந்தது. தர்க்கவ்யா கரணாதிகளில் விசேஷமாகப் பரிசயம் பண்ணாமலிருந்தாலும் காவ்ய நாடகாலங் காரங்களில் ஆழ்ந்த வ்யுத்பத்தி பெற்று வேதலக்ஷணங்களையெல்லாம் முகஸ்த மாகக் கொண்டு பதக்ரமஜடாகனங்களோடு நில்லாமல் வர்ணக்ரமாந்தமாகவும் பரிச்ரமப்பட்டு 'ஸாங்க வேதாத்யாயீ' என்று புகழ் பெற்றிருந்தவர் உத்தரமேரூர் ராகவாசார்ய ஸ்வாமி. காஞ்சீ ப்ராந்தத்தில் கனபாடிகள் இல்லையென்கிற அபப்ரதை இந்த ஸ்வாமியொருவரால்தான் நீங்கிற்று. ஸ்ரீவைகுண்டத்தை வருணிக்கின்ற எம்பெருமானார் *பரமயோகி வாங்மநஸாபரிச்சேத்ய ஸ்வரூப ஸ்வபாவமென்றும், *ப்ரஹ்மாதீநாம் வாங்மநஸாகோசர மென்றும் ஸாதித்தார். பட்டர் அந்த வைகுண்டத்தையே வர்ணிக்கும்போது *யத் துர்க்ராஹம் மத்கிராம்* என்றார். ப்ரஹ்மாதிகளின் வாக்குக்கு அகோசரமாயிருப்பதிற் காட்டிலும் தம் முடைய வாக்குக்கு துர்க்ரஹமாயிருப்பதை ஏற்றமாகத் திருவுள்ளம் பற்றினார் பட்டர். அதுபோல "என் வாக்குக்கும் துர்க்ரஹமான வித்யாவைபவமுடையவர் ராகவாசார்ய ஸ்வாமி" என்று சொல்லத் துணிகின்றேன். இந்த ஸ்வாமி இன்னமும் ஜீவித்திருக்கத் தக்கவர். ஆயினும் இவர் பரமபதித்து இருபது ஸம்வத்ஸரமாய் விட்டது. இவர் அடிக்கடி காஞ்சிக்கு எழுந்தருள்வர். அடியே னோடு ஸம்பாஷிக்க வேணுமென்றே பலகால் எழுந்தருளி நாலுநாள் எட்டுநாள் பத்துநாள் கூட அடியேனுடைய க்ருஹத்திலேயே யெழுந்தருளியிருந்ததுண்டு. அக்காலத்தில் வேதலக்ஷண விஷயமாக அடியேனெழுதி வெளியிட்ட வேதாத்ய யந ஸர்வஸ்வாதி க்ரந்தங்களை ஓரக்ஷரம் விடாமல் ஆழ்ந்து ஆராய்ந்து அபி நந்தித்த இந்த ஸ்வாமியின் அபிநந்தன பத்ரிகைகள் பல வெளிவந்திருக் கின்றன. வேதமோதினவர்களில் ஸம்ஸ்க்ருத வைதுஷ்யம் பெற்றவர்களில் இந்த ஸ்வாமியைப் போன்றவர்கள் மிகச் சிலரே யென்று மீண்டும் விஜ்ஞாபயே.

---

ஒரு குறிப்பு: எழுபத்தேழு பெரியார்களின் பெருமையென்று மகுடமிட்டு ஸ்ரீராமாநுஜன் நெ. 225. முதலாக நாமெழுதிவரும் வியாஸங்களில் ப்ரஸ்தாவிக்கப் படுகின்ற பெரியார்கள் நியமேந வைகுண்டவாஸிகளும் அடியேனுக்கு மிகவும் பரிசிதர்களுமான மஹான்களேயாவர். இப்போது நம்முடைய பாக்கியத்தினால் ஜீவித்திருக்கின்ற வித்வான்களைப்பற்றின ப்ரஸ்தாவம் இந்த ச்ரேணியில் நிக ழாது. ஆகவே வர்த்தமானவித்வான்களில் சிலரைக் குறிப்பிட்டு இவர்களின் பெருமையை வெளியிட வேணுமென்று சில நண்பர்கள் தெரிவிப்பது இப்போது ஆதரிக்கப்படுவதற்கு ஔசித்யமில்லை. அதற்கு ஸமயாந்தரம் நேரும்.

## 60. ஸ்ரீமதுபயவே. திருமலை ஈச்சம்பாடி. ராமாநுஜாசார்ய ஸ்வாமி.

ஸ்ரீகாஞ்சீபுரியில் தென்னாசார்ய ஸம்பிரதாய ப்ரவர்த்தகர்களில் தலைவராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. திருமலை. ஈச்சம்பாடி. நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி திருநாடலங்கரித்து எண்பது வருடமிருக்கும். ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயங்களும் அஷ்டாதசரஹஸ்யங்களும் வியாக்கியானங்களும் அந்த ஸ்வாமிக்கு வாசோ விதேயங்களென்று அஸ்மதாசார்யரான ஸ்ரீமத் பரமஹம்ஸ, அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி (ஷஷ்டி ஜீயர் ஸ்வாமி) அடிக்கடி ஸாதிக்கக் கேட்டிருந்தேன். அந்த ஸ்வாமியை அடியேன் ஸேவிக்க ப்ரஸக்தியில்லையாயிற்று. அந்த ஸ்வாமியின் பெரும்புகழ் அபாரமானது. ஸ்ரீமத் திருப்புட்குழி அப்பா ஸ்வாமி யென்று ப்ரஸித்தராக எழுந்தருளியிருந்த ஸ்ரீக்ருஷ்ணதாதாசார்ய ஸ்வாமியும் இவரும் ஸமகாலஸ்தர்களாம். பரஸ்பரம் வெகு கௌரவத்தோடு வாழ்ந்தவர்களாம். இந்த ஸ்வாமியின் திருக்குமாரர் ஈச்சாம்பாடி ராமாநுஜாசார்ய ஸ்வாமி யென்பவர் மஹாதேஜஸ்வியாகவும் மஹாஜ்ஞாநாதிகராகவும் விளங்கினவர். இந்த ஸ்வாமி ஸன்னிதியில் அடியேன் இளமையில் குருபரம்பராப்ரபாவம் (ஆருயிரப்படி) ஸேவித்தேன். அந்த ஸ்வாமி பரமசாந்தர். மஹாஸாத்விகப்ரக்ருதி. திருமாளிகையை விட்டுக் கீழே யிறங்காமல் ஏகாந்த சீலராக எழுந்தருளியிருந்தவர். அந்த ஸ்வாமி ஸன்னிதியிலே பலபல நல்வார்த்தைகளும் கேட்டிருக்கிறேன். வம்பு தும்புகள் பேசாமல் பூப்பறித்தாற்போலே ம்ருது மதுரமாக ஸாதிப்பவர். இந்த ஸ்வாமி திருநாடலங்கரித்து 55, 60 ஆண்டுகளாயின. ... *

## 61. ஸ்ரீமதுபயவே காளி. ரங்காசாரியார் ஸ்வாமி.

மாயவரம் தாலுக்காவில் காளி யென்பது ஒரு அக்ரஹாரம். அவ்விடத்தில் உதித்துத் தேரழுந்தூரில் வாழ்ந்து கொண்டிருந்த இந்த ஸ்வாமி புதுக்கோட்டை ஸம்ஸ்தானத்தில் நெடுங் காலம் தானாதிகாரி பதவியை அலங்கரித்திருந்தார். பிறகு விச்ராந்தராய் தமது திருக்குமாரரோடுகூட வஸிக்கவேண்டி கரக்பூரிலும் கல்கட்டாவிலு மெழுந்தருளியிருந்து கடைசியாக புது டில்லியில் இருக்கும்போது திருநாடலங்கரிக்க நேர்ந்துவிட்டது. அது பத்து ஸம்வத்ஸரங்களுக்குமேல் ஆய்விட்டது. இந்த ஸ்வாமியின் பரிசயம் எமக்கு விசேஷமாக இருந்தது. இவர்க்கு மதத்ரய நிரூபகரென்று ஒரு ப்ரஸித்தியுண்டு. அந்த ப்ரஸித்திக்கு ஏற்பச் சில க்ரந்தங்களுமியற்றிப் பிரசுரம் செய்திருக்கிறார் ஒருவருடைய தாக்ஷிண்யத்திற்கும் கட்டுப்படாமலும் ஸங்கேதபீதியில்லாமலும் அந்தரங்க ஸாக்ஷ்யத்தை வஞ்சியாமலும் தமது திருவுள்ளத்தில் பட்டதை வெளியிடும் பான்மை இந்த ஸ்வாமியிடத்தில் அடியேன் வெகு நாள் அநுபவித்த மஹாகுணம். அடியேனுடைய க்ரந்தங்களைப் பெரும்பாலும் கடாக்ஷித்தருளி அபிநந்தன பத்ரிகைகள் வெளியிட்டவர் இந்த ஸ்வாமி. * ரூபமேவாஸ்யைதந்மஹிமாநம் வ்யாசஷ்டே யென்னும்படி ஸேவை ஸாதித்துக் கொண்டிருந்தவர். இந்த ஸ்வாமி ஸன்னிதியில் ஸ்வரூப க்ரத்த காலக்ஷேபம் செய்தவர்கள் பலர். அன்னவர்களில் ஒருவரான ஸ்ரீமதுபயவே. கோமல். சேஷாத்ரியாசார்ய ஸ்வாமி

*ராமாயண பூஷணுதி பிருதாலங்க்ருதராய் சில ஸம்வத்ஸரங்களாக சென்னை மாநகரில் ப்ரவசன துரந்தரராய் விளங்கி வருவது ஸுப்ரஸித்தம். ... *

## 62 ஸ்ரீமதுபயவே. ஸ்ரீவில்லிபுத்தூர் மேலைவாத்யார் திருமலை ஐயங்கார் ஸ்வாமி

இப்போது திருமலை திருப்பதியில் ஸ்ரீமத்பரமஹம்ஸ. பெரிய ஜீயர் ஸ்வாமியாஸ்தானத்தை அலங்கரித்தருளாநின்ற ஸ்ரீ. மஹா ஸ்வாமிக்கு பூர்வாச்ரமத்தில் மாதுலரான இந்த ஸ்வாமி ஸ்ரீவில்லிபுத்தூரில் மேலைவாத்யா ரென்றே வ்யபதிஷ்டரா யெழுந்தருளியிருந்த சிஷ்டாக்ரேஸரர். இந்த ஸ்வாமியினுடைய பரிசயம் அடியேனுக்கு இளமையிலேயே கிடைத்தது. இருவோமுக்கும் தேச வ்யவதானம் மிகவுமிருந்தாலும் மதுரை கோயில் திருமலை பெருமாள்கோயில் முதலானவிடங்களில் பலகால் ஸந்திக்க நேர்ந்ததுண்டு. ஸ்ரீவில்லிபுத்தூரிலும் பலமுறை. ஸேவித்தேன். இவர் சிறந்த வித்வானுயிருந்ததோடு ஆசுகவி, சித்ரகவி இத்யாதி பிருதாவளிகளையும் பெற்றிருந்தார். சிஷ்டாக்ரேஸரர் என்பதை முந்துற முன்னமே விஜ்ஞாபித்தேன். இவரிடத்தில் அடியேன் அதிகமாகக் கண்ட குணம் ·ராஸிக்யம். அது ஸாமான்யமன்று. பரமரஸிகர், மஹாரஸிகர் என்று எவ்வளவெழுதினுலும் போதாது. இவரிடத்தில் ஸம்ப்ரதாய க்ரந்தங்கள் அதிகரித்தவர்கள் பலருளர். இவருடைய ஸ்வீக்ருத குமாரரான ராமாநு ஜய்யங்கார் வாக்மியாக விளங்கி வருகிருர். .... .... ... *

## 63 ஸ்ரீமதுபயவே. வேதவாத்யார் க்ருஷ்ணமாசார்யஸ்வாமி.

ஸ்ரீபெரும்பூதூரில் முப்பத்தைந்து ஸம்வத்ஸரங்களுக்குமுன்பு வாழ்ந்த வித்வான்களில் மிகச்சிறந்து விளங்கினவர் இந்தஸ்வாமி. வேதவாத்யார் என்றே வ்யபதிஷ்டராயிருந்துவந்தார். வேதமும் வியாகரண சாஸ்த்ரமும் இந்தஸ்வாமிக்கு ஸ்வாதீனமாயிருந்ததுபோல் கடல்சூழ்ந்த மண்ணுலகில் வேறுயார்க்கும் வசப்பட்டிருக்கவில்லையென்று அக்காலத்திலுள்ள ஸகல வைதிகர்களும் ஏகமுகமாகச் சொல்லுவர்கன். இவருடைய பரம்பரையே மிகச்சிறந்த வைதிகபரம்பரை. இவருடைய திருத்தகப்பனுரிடத்தில் வேதமோதித் தேறினவர்கள் உபயகலையாரிலும் அடியேனுக்குத் தெரிந்து ஐம்பதறுபது ச்ரோத்ரியர்களிருந்தார்கள். அடியேனுடைய வேதோபாத்யாயரான ஸ்ரீமதுபயவே மாம்பள்ளம் ஸுதர்சநாசார்ய ஸ்வாமி அந்த மஹாஸ்வாமியிடத்திலேயே வேதமதிகரித்தவராதலால் அவரைப் பற்றி நாடோறும் கால்மணியாவது ப்ரஸ்தாவம் செய்யாமலிருக்கமாட்டார். அப்படியே அவருடைய திருக்குமாரரான (ப்ரக்ருத) க்ருஷ்ணமாசார்யஸ்வாமியின் பெருமைகளையும் பேசிக்கொண்டிருப்பர். இவரிடத்தில் வேதமோதினவர்களும் வியாகரண சாஸ்த்ரமதிகரித்தவர்களும் பலருண்டு. தற்காலம் ஸ்ரீபெரும்பூதூர் ஸம்ஸ்க்ருத கலாசாலையில் உபாத்யாயராக விளங்கும் ஸ்ரீஉவே. காந்தூர். சேஷாத்ரியாசாரியரும் இவருடைய அந்தேவாஸியே. இந்த க்ருஷ்ணமாசாரியர்

ஸ்வாமி ஸ்ரீ பெரும்பூதூர் காலேஜில் பலவாண்டுகள் வியாகரணப்ரவசன நிரதராக எழுந்தருளியிருந்தார். தமது திருமாளிகையில் வேதாத்யாபனம் தவருதவர். *

## 64 ஸ்ரீமதுபயவே திருமழிசை நாதப்பங்கார்ஸ்வாமி.

இந்த ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூர் ஸம்ஸ்க்ருத கலாசாலையில் பலவாண்டுகள் ஸாஹித்யவ்யாகரண ப்ரவசன நிஷ்ணுதராக எழுந்தருளியிருந்தவர். அடியேனுடைய இளமையில் இந்த ஸ்வாமியின் பரிசயம் மிகவுமிருந்தது. இவர் திருநாட்டுக்கெழுந்தருளி கிட்டத்திட்ட அறுபது ஸம்வத்ஸரங்களாகியிருக்கும். இந்தஸ்வாமி பண்டிதர்களுக்குக் கடிதமெழுதினல் ஆலோசனையில்லாமல் சுலோகமாகவே யெழுதிக்கொண்டுபோவர். முற்காலத்தில் திருமழிசையில் ஸாமாந்ய சாஸ்த்ர ப்ரவீணர்களும் உபயவேதாந்த ப்ரவர்த்தகர்களுமல்லாதவர்கள் இருந்ததில்லையென்று ப்ரஸித்தி. முப்பது நாற்பது ஸம்வத்ஸரங்களுக்கு முந்தினகாலம்வரையில் அந்த ப்ரஸித்தி அநபாயமாயிருந்துவந்ததை அறிவேன். உத்தரராமசரிதத்தில் "புரா யத்ர ஸ்ரோத: புலிநமதுநா தத்ர ஸரிதாம், விபர்யாஸம் யாதோ கனவிரலபாவ: க்ஷிதிருஹாம்" என்றச்லோகமே இப்போது நினைவுக்கு வருகின்றது. இது திருமழிசையின்ஸ்திதிக்கு மட்டுமன்று. ... *

## 65-69. திருமழிசையிலெழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. வரதாசார்யஸ்வாமி, புத்தாம் வேங்கடாசார்யஸ்வாமி, திருவாழிஸ்வாமி; அய்யன் ராமாநுஜாசார்யஸ்வாமி ராய்ஜீ ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி.

மேலே குறிப்பிட்ட ஐந்து திருநாமங்கள் திருமழிசையில் பரிகணிதர்களான வித்வான்களா யெழுந்தருளியிருந்தவர்கள். இவர்களுள் ஸ்ரீவரதாசார்யஸ்வாமி ப்ரசண்டபண்டிதோத்தமராக விளங்கிவந்தார். திருவல்லிக்கேணி வேதவேதாந்தவர்த்தினீஸபையில் ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமியோடுகூட சாஸ்த்ரபரீக்ஷகராக எழுந்தருளியிருந்தவர்; ஸ்ரீபாஷ்யபகவத்விஷயங்களை நித்யப்ரவசனம் செய்துகொண்டிருந்தவர். புத்தாம் வேங்கடாசார்யஸ்வாமி நியாயவேதாந்தங்களில் மிகவும் பரிச்ராந்தராய் அநுஷ்டான சீலராயிருந்துவந்தார். திருவாழிஸ்வாமி ஸ்ரீபாஷ்யப்ரவசனத்தில் நிரதராக எழுந்தருளியிருந்தவர். அய்யன் ராமாநுஜாசாரயஸ்வாமி உபயவேதாந்த ப்ரவசன நிஷ்ணுதராயிருந்ததோடு இதிஹாஸ புராணங்களிலும் ப்ரவக்தாவாக இருந்துவந்தார். ராய்ஜீ. ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி பத்தெட்டு வருஷகாலம் சென்னை சாரிடிகளில் காலக்ஷேபப்ரவர்த்தகராக எழுந்தருளியிருந்து பிறகு நம்பெருமாள் ஸன்னிதியில் ஸ்ரீமத்பரமஹம்ஸ ஸ்ரீரங்க நாராயணஜீயர் ஆஸ்தானத்தை அலங்கரித்திருந்து திருமேனியின் அபாடவத்தினல் திருமழிசைக்கேயெழுந்தருளித் திருநாடலங்கரித்தவர். *

# ஸ்ரீ பாஷ்யாதிகரண மெழுபத்தாறு.

[ஸ்ரீராமாநுஜன்-232ன் தொடர்ச்சி.]

## 25. ப்ரயோஜநவத்த்வாதிகரணம்.

கீழே க்ருத்ஸ்நப்ராஸக்த்யதிகரணம் விவரிக்கப்பட்டது. இப்போது, அதற் கடுத்த ப்ரயோஜநவத்த்வாதிகரணம் விவரிக்கப்படுகிறது, பரமபுருஷன் ஜகத்தைப் படைக்க சக்தன் என்பதில் விவாதமில்லை. ஆனால் ஜகத் ஸ்ருஷ்டியினால் அவனுக்கு யாதொரு ப்ரயோஜனமும் ஸித்திக்கமாட்டாதாகையாலே அவனை ஸ்ருஷ்டி கர்த்தாவாக ஒப்புக்கொள்ள ஔசித்யமில்லை. உலகத்தில் "ப்ரயோஜநமநுத்திச்ய ந மந்தோபி ப்ரவர்த்ததே" என்கிற வசனம் அனைவருமறிந்தது. ஒரு ப்ரயோஜனத்தைக் கணிசியாமல் மூடன்கூட ஒரு காரியத்தில் கைவைக்க மாட்டானென்பது இதன் பொருள். ஆகவே பரமபுருஷனை ஜகத்ஸ்ரஷ்டாவாக இசைந்தால் அவன் ஒரு ப்ரயோஜனத்தைக் கருதி ஸ்ருஷ்டியில் ப்ரவர்த்திக்கிறானென்று கூறவேண்டும். அவனோ அவாப்த ஸமஸ்த காமனென்று ப்ரஸித்தி பெற்றவன்; ஜகத்ஸ்ருஷ்டியினால் அவன் பெறலாவதொரு ப்ரயோஜன முள்ளதாக நிரூபிக்கமுடியாது. ஏதேனுமொரு ப்ரயோஜனத்தைச் சொன்னால் அது முன்னேயில்லையென்று கொள்ளவேண்டி வருமாகையாலே அவனுக்கு இயற்கையாகவுள்ளதான அவாப்த ஸமஸ்த காமத்வ ப்ரஸித்திக்கு பங்கம்வரும். உலகத்தில் அவரவர்கள் செய்யுங்காரியங்களுக்கு ஸ்வார்த்த ப்ரயோஜனமேயுள்ளதென்கிற நிர்ப்பந்தமில்லாமையாலும், பரார்த்தமாகவும் காரியங்கள் செய்வதுண்டாகையாலும் இங்கு பர ப்ரயோஜனத்திற்காக ஸ்ருஷ்டி யென்று சொல்லவும் போகாது. அவாப்த ஸமஸ்த காமனானவன் பரார்த்தமாகச் செய்கிறானென்றால் பிறரை அநுக்ரஹிக்க வேண்டிச் செய்வதாக இருக்கவேணும். பலவகைத் துன்பங்களை யனுபவிப்பதற்கு ஆஸ்பதமாகக் காணப்படுகிற ஸ்ருஷ்டியை அநுக்ரஹ கார்யமாக எண்ணுவதற்கில்லையே. துக்கம் கலசாமல் ஆனந்தமே அநுபவிப்பதாக ஜகத்து காணப்படுமாகில் பரமகாருணிகனான ஈச்வரன் கருணையினால் ஸ்ருஷ்டித்தானென்று சொல்ல ஏற்கும். அப்படியில்லையே. ஆகவே ஈச்வரன் ஜகத்காரண பூதனல்லன் என்று பூர்வபக்ஷம் தோன்ற, அதன் பரிஹாரார்த்தமாக இவ்வதிகரணம் அவதரிக்கின்றது.

(ஸூ) *ந ப்ரயோஜநவத்த்வாத்.* (2—1—32.) இது பூர்வபக்ஷஸூத்ரம். (இதன்பொருளாவது)—ப்ரயோஜநவத்த்வாத்—செய்கிற காரியம் ஒரு ப்ரயோஜனத்தை யுடைத்தாயிருக்கவேண்டுகையாலே, [ப்ரக்ருதத்தில் பரமபுருஷனுக்கு ஒரு ப்ரயோஜனமும் சொல்லமுடியாதாகையாலே] ந—ஈச்வரன் ஜகத்காரண பூதனல்லன் என்கை. இதற்குமேல் ஸித்தாந்த ஸூத்ரம் வருமாறு;—

ஸூ. *லோகவத் து லீலாகைவல்யம்.* (2-1-33) ஜகத்ஸ்ருஷ்டிக்கு லீலையே ப்ரயோஜனமென்று ஸமாதானம் காட்டப்படுகிறது. உலகில் ஸார்வபௌமனானவொரு சக்ரவர்த்தியை யெடுத்துக்கொள்வோம். அவன் அவாப்தஸமஸ்தகாமனென்னக் குறையில்லை. அவன் சில தோழரோடு கூடிப் பந்துவிளையாட்டு முத

லான லீலைகளைச் செய்யக் காணுநின்றோம். அதனால் அவனுக்கொரு ப்ரயோஜனமுமில்லையென்பது ப்ரத்யக்ஷம். ஆயினும் லீலையாக நடந்துவருகிறது. அதே போல, பகவானும் லீலையாகவே ஜகத்ஸ்ருஷ்டிபண்ணிப் போருகிறான் என்றதாயிற்று. ஸூத்ரத்தில் லோகவத் என்பதற்குப்பொருள் 'லோகத்திற்போல' என்பதாம். "யதா லோகே ராஜ்ஞ: கந்துகாத்யாரம்பே" என்பது வேதாந்த தீப ஸூக்தி. லீலாகைவல்யம்—லீலைமட்டும் என்றபடி.

## — இவ்விடத்தில் மணவாளமாமுனிகளின் விமர்சம் —

பிள்ளை லோகாசார்யர் தத்வத்ரயத்தில் ஈச்வரப்ரகரணத்தில் இவ்விஷயத்தை யருளிச்செய்யுமிடத்து "இதுக்கு ப்ரயோஜனம் கேவலலீலை" என்றருளிச் செய்தார். அதற்கு வியாக்கியானம்—"அவாப்தஸமஸ்த காமதயா பரிபூர்ணனாயிருக்கிறவனுக்கு இந்தவ்யாபாரத்தால் ப்ரயோஜனமென்னென்ன அருளிச்செய்கிறார் (இதுக்கு ப்ரயோஜனம் கேவல லீலை) என்று. அதாவது, இந்த ஜகத்ஸ்ருஷ்டி ரூபவ்யாபாரத்துக்கு ப்ரயோஜனம் வெறும்லீலை யென்றபடி." என்றருளிச்செய்துவிட்டு, "ஸ்ருஷ்டி லீலாரூபம்" என்று வாக்யப்ரயோகம் பண்ணலாமேயொழிய "ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜனம் லீலை" என ப்ரயோகம் பண்ணுவது சாஸ்த்ரீயமாகுமாவென்று விமர்சித்தருளுகிறார் மாமுனிகள். "ஜகத்ஸர்க்கே லீலைவ ப்ரயோஜநம்" என்றுள்ள பகவத்பாஷ்யகார ஸ்ரீஸூக்தியின்மேலும் இந்த விமர்சம் ப்ராப்தமாகிறது. இங்கு மாமுனிகளின் ஸ்ரீஸூக்திவருமாறு—"லீலையாவது தாதாத்விகரஸமொழிய காலாந்தரத்தில் வருவதொரு பலத்தைக் கணிசியாமல் பண்ணும் வ்யாபாரமேயாகிலும் (இதுக்கு ப்ரயோஜநம்) என்று ஸ்ருஷ்டி ரூபவ்யாபாரத்துக்கு ப்ரயோஜனமாகச் சொல்லுகையாலே தாதாத்விக ரஸமாத்ரத்தைச் சொல்லிற்றாகக் கடவது" என்பதாம். இந்த பங்க்திகள் சாஸ்த்ரவ்யுத்பன்னர்களுக்கொழிய அர்த்தபோதகமாக மாட்டாமையாலே சிறிது விவரிக்கவேண்டியதாகிறது. லீலையாவது—பின்னிட்டுவருவதொருபலனைக் கோலாமல் தற்காலத்தில் விளைவதொரு இன்பத்தைமட்டும் விரும்பிச்செய்யும் வியாபாரம். ஸ்ருஷ்டியாகிற வியாபாரத்திற்கு லீலையாகிற வியாபாரம் ப்ரயோஜனமென்றால் இது அந்வயிக்கமாட்டாது. இதைப் பொருந்த வைக்கவேணும், மணவாள மாமுனிகள் பொருந்த வைக்கும் வழி கேண்மின். லீலையாவது—தற்காலத்தில் விளைவதொரு இன்பத்தை விரும்பிச் செய்யும் வியாபாரம் என்பது உண்மையே யாயினும், ப்ரக்ருதத்தில் 'தற்காலத்தில் விளைவதொரு இன்பம்' என்றிவ்வளவே லீலாசப்தார்த்தமாகக் கொள்ளப்படவேண்டும். வ்யாபார பர்யந்தமாகப் பொருள் கொண்டால் தான் 'வ்யாபாரத்துக்கு வ்யாபாரம் ப்ரயோஜனம்' என்று சொல்லுகையால் வரும் அநுபபத்தி இடம் பெறும். இப்போது வ்யாபார பர்யந்தமாகக் கொள்ளாமல் 'லீலையாவது தற்காலத்தில் விளைவதோர் இன்பம்' என்னுமளவே பொருளாகக் கொள்ளப்படுவதால் 'ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜனம் தாத்காலிக ரஸம்' என்றதாகி வாக்யப்ரயோகம் பொருந்திவிடுகிறது—என்பது மாமுனிகளின் உபபாதனப்ரகாரம். "த்வதாச்ரிதாநாம் ஜகதுத்பவஸ்திதிப்ரணாச ஸம்ஸார விமோசநாதய: பவந்தி லீலா." என்ற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியிலும், "அகில புவநஜன்மஸ்தேம பங்காதிலீலே" என்ற பாஷ்ய மங்கல ச்லோகத்திலும் அநுபபத்திசங்கைக்கு ப்ரஸக்தியேயில்லை யென்று தெளிக.

சப்த ப்ரயோகத்தில் அநுபபத்தி சங்கா ஸமாதானங்கள் இங்ஙனே நிகழ்ந்திருப்பது தவிர, லீலாகைவல்ய மென்ற அர்த்தத்திலும் மணவாளமாமுனிகள் (தத்வத்ரய வியாக்கியானத்திலேயே அவ்விடத்திலேயே) ஓர் அநுபபத்தியை சங்கித்துப் பரிஹாரமு முணர்த்தியருளியுள்ளபடியைக் கேளீர். அவ்விடத்து ஸ்ரீஸூக்திகளின் தாற்பரியத்தை மட்டும் இங்கு விளக்குகிறோம்; பரமபோக்யங்களான ஸ்ரீஸூக்திகளை அங்கே ஸேவிப்பது.

ஸர்வேச்வரன் ஜகத்வ்யாபாரத்தை லீலையாக நடத்திப் போருகிறானென்பதை ஸூத்ரகாரர் மட்டு மன்றிக்கே மற்றும் மஹர்ஷிகளும் * க்ரீடதோ பாலகஸ்யேவ சேஷ்டாம் தஸ்ய நிசாமய* இத்யாதிகளாலே வெளியிட்டுள்ளார்கள். ஆழ்வார்களும் * இன்புறுமிவ்விளையாட்டுடையான் * இத்யாதியருளிச் செய்தார்கள். ஆகவே லீலையென்பது மறுக்கத்தக்கதன்றாகிலும், * விசித்ரா தேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும், பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந் ஹஸ்தபாதாதி ஸம்யுதா.* என்றும், (திருவாய்மொழி 3—9 10) * சென்று சென்றாகிலுங் கண்டு சன்மங்கழிப்பானெண்ணி ஒன்றி யொன்றியுலகம் படைத்தான் * என்றும் சேதனர்களுடைய உஜ்ஜீவனம் ப்ரயோஜனமாக ஜகத் ஸ்ருஷ்டிபண்ணினானென்று சொல்லுகிற இவ்வசனங்களுக்கும் சேர நிர்வஹிக்கவேணுமே யென்னில்; நிர்வஹிக்கக் குறையில்லை. சேதனோஜ்ஜீவனமும் லீலையுமாகிற இரண்டும் ப்ரயோஜநமாயிருக்கச் செய்தேயும் ப்ராசுர்யத்தைப்பற்ற லீலையைச்சொல்லிற்று. அதாவது, * ஸ்வாதந்த்ர்யமைச்வரமபர்யநுயோஜ்ய மாஹு: * என்கிற ஆழ்வானுடைய ஸ்ரீஸூக்தியின்படி ஸர்வேச்வரனே நினைத்தபடி செய்யவல்ல சக்திமான். ஸகலாத்மாக்களையும் ஏக காலத்திலே முக்தராக்கவல்ல சக்திமான். அப்படியிருந்தும், தானிட்ட வழக்கான ஆத்மாக்களை கர்மத்தை வ்யாஜீகரித்துக் கைகழியவிட்டு சாஸ்த்ரமர்யாதையிலே காலக்ரமேண அங்கீகரிப்பதாக ஒரு கட்டளையிட்டு வைத்திருப்பதுண்டே, இது வொரு லீலாரஸம் கொண்டாடுவதற்கே யன்றோ; இவ்விபூதிக்கு லீலாவிபூதியென்றே திருநாமமன்றோ, ஆக இவ்விபூதியில் லீலையே ப்ரசுர ப்ரயோஜனமாய்ச் செல்லுகையாலே ஸூத்ரகாராதிகளும் ஸ்ருஷ்டிப்ரயோஜனம் லீலையேயாகச் சொன்னதில் குறையொன்று மில்லையாயிற்று, ப்ராஸங்கிகமான விது நிற்க.

இனி அடுத்த ஸூத்ரத்திற்குச் செல்வோம். ஜகத்துக்களைப் படைப்பவன் ஈச்வரனே யென்று கொள்ளுமளவில், அவனைப் பக்ஷபாதியென்றும் கருணையற்றவனென்றும் சொல்ல வேண்டியதாகிறது. ஏனென்னில்; ஸ்ருஷ்டிக்கிறவளவில் ஸகலாத்மாக்களையும் ஒருபடியாகவல்லாமல் தேவமநுஷ்யாதி பேதங்களையிட்டிருப்பதும், சிலரை மூடர்களாகவும் சிலரைப் பண்டிதர்களாகவும், சிலரை ஸுகமே அனுபவிப்பவர்களாகவும் சிலரை துக்கமே அநுபவிப்பவர்களாகவும் படைக்க இங்ஙனே பலவாறு விஷம ஸ்ருஷ்டி காண்கையாலே ஸர்வேச்வரனுக்கு இது அவத்யமாகுமன்றோ? ஸர்வஸமனென்றும் பரம தயாளுவென்றும் ப்ரஸித்தி பெற்றிருக்கிற அப்பெருமானுக்கு எல்லாரளவிலும் ஒத்திராமையாகிற வைஷம்யமும், து:க்கிகளாக ஸ்ருஷ்டிக்கையாலே பரதுக்காஸஹிஷ்ணுத்வமாகிற க்ருபையில்லாமையும் வாராதோ வென்கிற சங்கை தோன்ற, அதற்குப் பரிஹாரமுணர்த்துகிறது மேல் ஸூத்ரம்.

ஸூ. வைஷம்ய நைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத் ததா ஹி தர்சயதி. (2-1-34)

பூர்வபக்ஷமும் ஸித்தாந்தமும் சேர்ந்தஸூத்ரமிது. வைஷம்ய நைர்க்ருண்யே ந=வைஷம்யமும் நிர்தயத்வமுமாகிற அவத்யங்கள் ஸம்பவிக்கமாட்டா. (ஏனென்னில்;) ஸாபேக்ஷத்வாத்–அவரவர்களின் புண்யபாப ரூபகருமங்களை யெதிர்பார்த்து விஷமஸ்ருஷ்டி நடப்பதனாலே. ததா ஹி தர்சயதி — ச்ருதிஸ்ம்ருதி முதலான ப்ரமாண ஜாலம் இவ்வர்த்தத்தைக் காட்டுகின்றதன்றோ. "ஸாதுகாரீ ஸாதுர் பவதி, பாபகாரீ பாபோ பவதி. புண்ய: புண்யேந கர்மணா பவதி பாப: பாபேந கர்மணா" இத்யாதி ச்ருதிகளும், "நிமித்தமாத்ரமேவாஸௌ ஸ்ருஜ்யாநாம் ஸர்க கர்மணி, ப்ரதாநகாரணீபூதா யதோ வை ஸ்ருஜ்யசக்தய:. நிமித்த மாத்ரம் முக்த்வைவ நாந்யத் கிஞ்சிதபேக்ஷதே, நீயதே தபஸாம் ச்ரேஷ்ட! ஸ்வசக்த்யா வஸ்து வஸ்துதாம்." என்கிற ஸ்ரீவிஷ்ணு புராணவசனங்களும் இங்கு நோக்கத் தக்கன. ஸ்வசக்த்யா வஸ்துதாம் நீயதே–ஸ்வகர்மங்களினாலேயே தேவாதிவஸ்துத்வ ப்ராப்தி யென்றபடி.

இதற்குமேலும் ஒரு ஆசங்கை தோன்றுகிறது; ஸ்ருஷ்டிக்கு முன்னே க்ஷேத்ரஜ்ஞர்கள் கிடையாது. ஏனென்னில், * ஸதேவ ஸோம்ய! இதமக்ர ஆஸீத் * இத்யாதி ச்ருதியில்-ப்ரளயதசையில் க்ஷேத்ரஜ்ஞர்களுக்கு பரப்ரஹ்மத்தோடு ஐக்யம் தெரிவிக்கப்படுகையாலே. எப்போது க்ஷேத்ரஜ்ஞர்களில்லையோ அப்போது அவர்களின் கருமமும் இருக்கப்ரஸக்தியில்லை. ஆகவே விஷமஸ்ருஷ்டிக்குக் காரணம் க்ஷேத்ரஜ்ஞர்களின் கருமங்கள் என்று எங்ஙனே சொல்லலாம்? என்று சங்கிக்க இடமுள்ளது, இதற்கு ஸமாதானம் சொல்லுகிறது அடுத்த ஸூத்ரம்.

ஸூ. ந கர்மாவிபாகாதிதிசேந்ந அநாதித்வாத் உபபத்யதேசாபி உபலப்யதே ச. (2—1—35) ப்ரளய காலத்தில் ஜீவாத்மாக்கள் புதிதாக ஸ்ருஷ்டிக்கப்படுவதில்லை. * ந ஜாயதே ம்ரியதே வா விபச்சித் * *ப்ரக்ருதிம் புருஷஞ்சைவ வித்த்யநாதீ உபாவபி * இத்யாதி ப்ரமாணங்களினால் க்ஷேத்ரஜ்ஞர்களின் அநாதித்வம் அறிவிக்கப்படுகிறது. அதனால் கர்மப்ரவாஹமும் அநாதியென்பது ஸித்தம். அப்படியில்லையானால்] ஒருவர் செய்த கருமத்தின் பலனை யனுபவிப்பது அவர்க்கு இல்லாமற்போகவும், தான் செய்யாத கருமத்தைத் தான் அநுபவிக்கவும் ப்ரஸங்கிக்கும். *ஸூர்யா சந்த்ரமஸௌ தாதா யதாபூர்வமகல்பயத்* என்ற ச்ருதியை ஊன்றி நோக்கவேணும்; இதில் 'யதாபூர்வம்' என்றிருக்கையாலே நவீன ஸ்ருஷ்டி எதுவும் கிடையாதென்பது எளிதாக விளங்கும். ப்ரலய காலத்தில் பரப்ரஹ்மத்தோடு ஐக்யம் சொல்லப்படுகிறதே, அதற்கு என்னகதியென்னில்; நாமரூபவிபாகத்திற்கு அர்ஹமன்றிக்கேயிருந்த நிலையைக் கொண்டு அங்ஙனே சொல்லிற்றத்தனை. பிறகு நாமரூப வ்யாகரணம் சொல்லப்படுகையாலே ஸ்வரூபம் அநாதியென்பது ஸித்தித்தே தீரும்.

ஆக, பரப்ரஹ்மத்தின் ஜகத்காரணத்வம் அசைக்கமுடியாததென்றும் ப்ரதானபரமாண்வாதிகளுக்கு அது அஸம்பாவிதமென்றும் தலைக்கட்டப்பட்டது.

ப்ரயோஜநவத்த்வாதிகரணம் முற்றிற்று.

இரண்டாமத்யாயத்தில் முதல்பாதம் முடிந்தது.

---

# வைதிகமநோஹரா (163-ன்) விஷயாநுவாதம்.

ஸ்ரீ ராமாநுஜன் 229ல் நற்பொருளெழுநூறு தொடங்கினோம். முதல் நூறு வெளியாயிற்று. மற்ற நூறுகள் அச்சாகிவருகின்றது. அடுத்த இதழில் 2, 3, 4 நூறுகள் அன்பர்கட்கு அரியபெரிய விருந்தாகக் கிடைக்கும். தமிழிற்போலவே ஸம்ஸ்க்ருதத்திலும் **ஸதர்த்தஸப்தசதீ** என்னும் பெயரால் வெளிவருவதை ஏற்கெனவே தெரிவித்திருக் கிறோம். நமது ஸம்ஸ்க்ருத பத்ரிகையான வைதிகமநோஹராவில் வெளிவருகின்றவதில் இரண்டு நூறுகள் ஏற்கெனவே வெளிவந்து மூன்றுவது நூறு இம்மாதத்தில் வெளிவரு கின்றது. தமிழிலும் ஸம்ஸ்க்ருதத்திலும் விஷயம் ஒன்றேயன்று. வெவ்வேறு விஷயங்கள். ஸம்ஸ்க்ருத—ஸதர்த்தஸப்தசதியில் த்ருதீய சதகத்தின் விஷயங்களை ஸ்ரீ ராமாநுஜன் நேயர்களும் அறிந்துகொள்ள வேணுமென்று இங்குச் சுருக்கமாக விஜ்ஞாபிக்கிறேன்.

வட இந்தியாவில் பலவிடங்களில் நெடுநாளாகவே அடியேனுக்குப் பரிசிதர்கள் பலருளர். அன்னவர்களில் பலரிடமிருந்து ஐந்தாறுமாத காலமாய் அடிக்கடி கடிதங்கள் கிடைத்துவருகின்றன. விஷயமென்னவென்றால் "ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகன் தென்கலை ஸம்பிரதாயஸ்தரா? வடகலை ஸம்பிரதாயஸ்தரா? எந்த ஆகாரமுள்ள திருமண்காப்பை அவர் அணிந்துகொண்டிருந்தார்? உண்மையை நாங்கள் தெரிந்து கொள்ளும்படி பக்ஷபாதமில்லாமல் நன்கு விமர்சித்துத் தெளிவிக்கவேணும்" என்பதே.

இவ்விஷயத்தில் நாம் நெடுநாளாகவே பல பாஷைகளிலும் வெளியிட்டுள்ள நூல்களில் ஸம்ஸ்க்ருத பாஷையிலுள்ள சில நூல்களை யனுப்பி இவற்றால் தெளிந்து கொள்ளலாமென்று தெரிவித்துவந்தோம். ப்ரயாகக்ஷேத்ரத்தில் (Allahabad) தாராகஞ்ஜ் என்னுமிடத்தில் நெடுநாளாக விளங்கிவருகின்ற ஸ்ரீ கோவிந்த தேசிக ஸம்ஸ்க்ருத வித்யாசாலையில் பண்டிதராயிருக்கின்ற 'ஸநத்குமாரத்ரிபாடீ' என்பவரும், மத்ய ப்ரதேசத்தில் 'டீகம்கட்' என்னுமிடத்திலுள்ள ஸம்ஸ்க்ருத பாடசாலையின் தலைவரான ராஜாராம சாஸ்த்ரி யென்பவரும் ஸமீபகாலத்தில் மேலே குறித்த விஷயத்தில் விசேஷ சர்ச்சையை விரும்பிக் கடிதமெழுதினார்கள். வட இந்தியாவில் பலபல ஸ்ரீ வைஷ்ணவர்கள் இதில் தெளிவில்லாமலிருப்பதாகவும் தெரிவித்தார்கள். வட இந்தியர் தென்னிந்தியர் என்கிற வாசியற ப்ரக்ருத விஷயத்தில் ஸந்தேஹமுள்ளவர்களனைவரும் தெளியட்டு மென்று [ஏற்கெனவே நாமெழுதி வெளியிட்டுள்ள பல நூல்களின் ஸாரஸம்க்ஷேப ரூபமாக] வடமொழியில் இதை யெழுதுகிறோம்.

மேலே குறித்த ஸந்தேஹம் ஸ்ரீமந் நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் முதலான ஆசாரியர்கள் விஷயத்தில் ஒருவர்க்கும் உதிக்கவில்லை. ஸ்ரீமந் நிகமாந்தகுரு விஷயத்தில் மட்டுமே உதித்திருக்கிறது; அஸ்து. எதையும் மனம்போனபடியும் கைபோனபடியுமெழுதாமல் பிறர் அசைக்க எண்ணவும் முடியாதபடி ப்ராமாணிக ஸரணியில் எழுதுபவர் நாம் என்றுள்ள ப்ரஸித்திக்குக் குறை விளையாதபடி ப்ரமாணோப பத்தி புஷ்கலமாகவே யெழுதுகிறோம். (இவ்வளவும் அதில் முகவுரை.)

தேசிகன் வடகலை ஸம்ப்ரதாயஸ்தரே யென்பவர்களும், அவர் தென்கலை ஸம்பிர தாயஸ்தரே யென்பவர்களும் எங்கும் மலிந்துள்ளார்கள். 'அவர் வடகலை ஸம்பிரதாயஸ்தர்

களுக்கு ஆசாரியர்' என்கிற ப்ரஸித்தி ஒரு நூற்றுண்டுக்கு உட்பட்டகாலத்தில் உலகில் தோன்றியுள்ளது. 'தேசிக பக்தர்கள்—தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்கள்—தேசிகதர்சன துரந்தரர்கள்' இத்யாதிகளான பல வ்யபதேசங்களை உலகில் பரப்பிப் புதிது புதிதான பல தாண்டவங்களைச் செய்து போரும் திரள் மலிந்த இவ்வுலகில் "தேசிகர் தென்கலையா வடகலையா?" என்கிற விசாரம் விளைந்ததுவே வியக்கத்தக்கதாயிருக்கின்றது. ஆசார்ய லக்ஷணங்களில் குறையற்றவரான நிகமாந்த மஹாகுருவை எங்களாசார்யர் என்று யார் கொண்டாலும் ஹானியொன்றுமில்லை. ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தர்களெல்லார்க்கும் அவர் ஆசிரியரே என்று ஒரே வார்த்தையில் முடிக்கவேண்டிய விஷயமிது. ஆனால் விசாரத்தின் தன்மை எப்படிப்பட்டதென்பதை ஊன்றி நோக்கவேணும். அதை நன்கு முடிவுசெய்துகொண்டு மேலே போகவேணும். ஸ்ரீ வைஷ்ணவர்களை நோக்கி வடகலையார் தென்கலையார் என்கிற வழக்குச் சொல் எப்போது உண்டாயிற்றென்று ஆராயவேண்டும்.

ஆயிரமாண்டுகட்கு முற்பட்ட நூல்களிலும் வடகலை தென்கலை என்கிற சப்த ப்ரயோகம் காணப்படுகின்றது. கம்பராமாயணத்தில் தொடக்கத்திலேயே "வடகலை தென்கலை வடுகுகன்னடம்" என்கிற செய்யுளிருப்பது ப்ரஸித்தம். திருமங்கையாழ்வாரது பெரிய திருமொழியில் (7-8-7.) *செந்தமிழும் வடகலையும் திகழ்ந்த நாவர்* என்கிற பாசுரமும் ப்ரஸித்தம். இவ்விடங்களில் வடபாஷை தென்பாஷை என்னும் பொருளை யிட்டு வடகலை தென்கலை சப்தப்ரயோகமுள்ளதேயொழிய வேறில்லை. இக்காலத்தவர் களைப்பற்றி வழங்கும் சொற்களானவை ஊர்த்வபுண்ட்ராகார ஸந்நிவேசத்தின் வாசியை யிட்டே ப்ரதிஷ்டிதங்களாயிருக்கின்றன. எங்கும் யாவரும் அவரவர்களின் நெற்றியி லுள்ள புண்ட்ரத்தைக்கொண்டுதானே இன்னுர் தென்கலையார் இன்னுர் வடகலையார் என்று எண்ணுவதும் இயம்புவதும். ஸ்மார்த்தமாத்வர்களைக் குறிப்பதுமிங்ஙனேயன்றே.

முக்கியமாகப் புண்ட்ராகாரத்தைப்பற்றியே விவாதங்களும் கலஹங்களும் வளர்ந்து செல்லுகின்றன. இது தென்னிந்தியாவில் இரண்டொரு நூற்றுண்டாகவுள்ளது. முப்பது நாற்பது வருடங்களாக வட இந்தியாவிலும் இது விஷம்போல் ஏறி வளரத் தொடங்கி விட்டது. *ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய:* என்கிற பரமபவித்திரமான தனியனை விட்டு, 'தயாபாத்ரகர்ப்பிதமாக இருந்தால்தான் தனியனுக்குப் பெருமை' என்று ஒருவர் எண்ணி ஒரு புதிய சுலோகத்தைக் கற்பனை செய்ய, அதிலிருந்தே ப்ரபல விவாத கலஹங்கள் தோன்றினவென்று எத்திசையிலுமுள்ள நீதிமன்றங்களும் நிர்ணயித்துவிட்டன. ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் வேதாந்தவாசிரியர் ஒருவர்தாஞ அவதரித்திருக்கிருர். *நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம் பஹுபிருபசிதம் யாமுநேயப்ரபந்தைஸ் த்ராதம் ஸம்யக் யதீந்த்ரைரிதம் அகிலதம:கர்சநம் தர்சநம் ந:* என்று தேசிகர் தாமே யிட்டருளின சுலோகத்தின்படி மற்றும் பலபல ஆசாரியர்கள் ஒப்புயர்வற்ற வைபவசாலிகளாக அவதரித் திருக்கவில்லையா? ஆழ்வார்களும் ஆசாரியர்களும் மலிந்த நமது ஸம்பிரதாயத்தில் அவர்கள் அனைவர்க்கும் விக்ரஹப்ரதிஷ்டைகள் ஏற்பட்டிருக்கவில்லையா? அவர்களது ஈடுபாட்டிற் குரிய திவ்யதேசங்கள் தொண்டை நாடு சோழ நாடு பாண்டிய நாடுகளில் மலிந்திருக்க வில்லையா? இவற்றின் பரிஸ்திதிகளை சோம்பாமல் நாம் எத்தனையோ தடவை யெடுத்துக் காட்டியிருக்கவில்லையா ? நூற்றெட்டுத் திருப்பதிகளென்கிற திவ்யதேசங்களில்

சிலவற்றில் மாறுபாடு ஏற்பட்டிருந்தாலும் ஆழ்வார்களின் அவதார ஸ்தலங்களிலும் ஆசாரியர்களின் அவதார ஸ்தலங்களிலும் ஒன்றிலாவது ஒரு மாறுபாடு உண்டா? மாறுபாடு இல்லையென்பது மட்டுமன்றே; மாறுபாட்டுக்கான விவாதங்கூட விளைந்ததில்லையன்றோ.

இந்த ப்ரஸங்கத்தில் வேதாந்தவாசிரியரைப்பற்றி யெடுத்துக்கொள்வோம். இவருடைய திருவவதாரஸ்தலம் விளக்கொளியெம்பெருமான் ஸன்னிதி. அங்கு இவருடைய அர்ச்சாமூர்த்தியான திவ்யமங்களவிக்ரஹம் நெடு நாளாக விளங்காநின்றது. அப்படியிருந்தும் வெளி நிலத்தில் ப்ரபலமானவொரு தேசிகாலயப்ரதிஷ்டை நாற்பதாண்டுகட்கு முன்பு நடைபெற்றுள்ளது. இதேபோல் தேவப்பெருமாள் ஸன்னிதியிலும் (வாஹன மண்டபத்தில்) தேசிக விக்ரஹம் விளங்கச் செய்தேயும் வெளியில் வேகவதிக் கரையில் சென்ற நூற்றுண்டின் முடிவில் நடைபெற்றிருக்கின்றது. இவற்றைப்பற்றி விவேகிகள் விமர்சிக்கவேண்டாமா? புராதனமென்று குறித்த இரண்டு ஸ்தலங்களிலும் நவீன கற்பனைகள் இடம்பெற வழியில்லாமையாலே நூதன ப்ரதிஷ்டைகளைச் செய்து கொண்டார்களென்பதை உலகம் தெரிந்துகொள்ளவில்லையா? நவீனர்கள் தங்களுடைய குருவென்று சொல்லிக்கொள்கிற தேசிகர் முன்னிலையில் தென்கலையார் ஸ்ரீசைலேசத் தனியனையும் அதைச்சேர்ந்த வாழி திருநாமம் முதலியவற்றையும் அநுஸந்திக்க எப்படி நேர்ந்ததென்று விசாரம் ஒருபுறமிருக்க, அவருடைய திவ்யாலயத்தில் புதிய பாத்ரபத்யம் சொல்ல ஆரம்பித்ததற்காக **அஸக்ருத்** ராஜ தண்டனைகள் நேர்ந்திருக்கும் விஷயம் ஒரு பெரிய பாரதமாகவன்றோவுள்ளது. மற்றுமுள்ள ஆசாரியர்களின் திருமுன்பே அவரவர்களின் தனியன்களைச் சொல்லுவதில் ஒரு ஆடங்கமுண்டா? ஒரு ஆக்ஷேபமுண்டா? தேசிகர் முன்னிலையில் ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய தனியனைச் சொல்லுவதில் தான் ஒரு ஆக்ஷேபமுண்டானதுண்டோ? இல்லையே. தென்கலையாரும் சொல்லிவருகிற தனியனன்றோ அது.

அந்த ஸ்ரீமான் வேங்கட தனியனுக்கு அசிஷ்ட பரிக்ரஹமும் அபூர்த்தியுமாகிற இரண்டு அவத்யங்களிருப்பதாக நவீநர்களின் பிரசாரம். தென்கலையாரும் சொல்லுவதனுல் அசிஷ்ட பரிக்ரஹமாம்; வேதாந்த தேசிகரென்றில்லாமல் வேதாந்தாசார்ய: என்றிருப்பதனுல் அபூர்த்தியாம். ஸ்வருபக்ரந்தங்களுக்கு ஸேவிக்கக்கூடிய தனியனில் **கவிதார்க்கிக கேஸரீ** என்றிருப்பது அநுசிதம் என்று ஒரு புதிய வாதத்தை மைஸூரில் மூன்று நான்கு வருஷங்களுக்குமுன் பரமபதித்த மஹாப்ராஜ்ஞரான ஸ்ரீ பரகாலஸ்வாமி எழுதிவைத்திருக்கிருர். எழுதி உள்ளே வைக்கவில்லை. அச்சிட்டு வெளியிட்டிருக்கிருர். இப்படி விவேகிகள் அவிவேகிகள் என்கிற வாசியில்லாமல், நூதன கல்பிதமென்று நெஞ்சார அறிந்த பாத்திரத் தனியனில் கோவில் சண்டைகளுக்காகவே அநுராகமும், பரமபவித்திரமான ஸ்ரீமான் வேங்கட தனியனில் அநாதரமும் கொண்டதனுல் விவாதங்கள் வளர்ந்திட்டன. "பாத்திரத் தனியனும் அதைச் சேர்ந்த வாழிகளும் பிற்காலத்தில் சண்டைக்காகவே ஏற்பட்டவை" என்று உறுதிகொண்ட வடகலை விவேகிகள் இக்காலத்திலும் ஆங்காங்கு விளங்கியே வருகிருர்கள். அன்னவர்களைப்பற்றி "திகம்பரஜனே க்ராமே ஹாஸ்ய: கௌபீனவாந் நர:" என்பர்கள் நவீனர்கள்.

மிக முக்கியமாக ஆராயவேண்டுவதொன்று. "ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா **வர்த்ததாம் அபிவர்த்ததாம்**" என்று—ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞை நீடூழி வாழுமாறு

ஸ்ரீ வைஷ்ணவவுலகம் நாடோறும் செய்துவரும் மங்களாசாஸனத்தின் ப்ரமேயம் என்னவென்று பார்க்கவேணும். ஆங்காங்கு திவ்யதேச பரிபாலனத்திற்காக ஜீயர்களையும் ஆசார்யபுருஷர்களையும் ஏற்படுத்தி, அவர்களுக்கு தீர்த்த ப்ரஸாத மாலை பரிவட்ட மரியாதைகளையும் நியமித்தருளி, அந்த நியமனம் குறையொன்றுமின்றிக்கே நடைபெற்று வருகிற பத்ததிக்குச் செய்துபோருகிற மங்களாசாஸனம் இது. இந்த மங்களாசாஸனத்தை வடகலையார் செய்வதற்கு என்ன ப்ரஸக்தி? அர்த்தமறியாமல் அந்தபரம்பரையாகவன்றோ இது நடந்துவருகிறது. ஸ்ரீஉவே. D. T. தாதாசாரியாரும் மதுராந்தகம். வீரராகவாசாரியாரும் சேர்ந்து "ஸ்ரீ ராமாநுஜர் திருவரங்கத்தமுதனாருடைய திருத்தாயாரின் ஏகாஹ ச்ராத்தத்தில் கூரத்தாழ்வானை போக்தாவாக அனுப்பிவைத்து சூழ்ச்சியினால் கோயில் கொத்துச்சாவிகளைக் கைப்பற்றி கோவில் துறையார்களுக்கெல்லாம் புண்ட்ர விபர்யயம் செய்துவைத்ததாக எழுதியச்சிட்டிருப்பதை இதுவரை ஒரு வடகலை ப்ரமுகரும் மறுக்கவில்லை. அப்படி புண்ட்ரவிபர்யாஸம் பண்ணிவைத்ததுதான் ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞை யென்று இவர்களுடைய கல்வெட்டான அபிப்ராயம் தேறுகின்றது. இதற்கு இரு கலையார்களும் *வர்த்ததாம் அபிவர்த்ததாம்* என்று சொல்லி மங்களாசாஸனம் செய்து வருவதனால் அந்த திவ்யாஜ்ஞைக்கு நித்யஸ்ரீர் நித்யமங்களமேயாகின்றது.

ஆழ்வார்களின் அவதாரஸ்தலங்களும், ஆசாரியர்களின் அவதாரஸ்தலங்களும், திவ்யதேசங்களில் பெரும்பான்மையான ஸ்தலங்களும் [அதாவது, கி. பி. பத்தொன்பதாவது நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து பிறரால் ஆக்ரமிக்கப்பட்ட ஏழெட்டு ஸ்தலங்கள் தவிர மற்றவையெல்லாம்] நிராடங்கமாய் தென்கலை ஸம்ப்ரதாயமாகவே விளங்காநிற்க தேசிகரொருவர்மட்டும் ஸ்ரீ வைஷ்ணவர் குழுவில் வேறு புண்ட்ரமணிந்து கொண்டு உலாவினாரென்றால் இதை ப்ராமாணிகரான வொருவராவது ஏற்கக்கூடுமோ? ஸ்ரீ ராமாநுஜருடையவும் கூரத்தாழ்வானுடையவும் சூழ்ச்சியினால் புண்ட்ரவிபர்யாஸமாயிற்றென்கிற [D. T. T. முதலானோருடைய] கொள்கையின்படி கொண்டாலும் ஸ்ரீ ராமாநுஜர்க்கு மிகவும் பிற்பட்டவரான தேசிகர் ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞாஸித்தமான புண்ட்ரத்தைவிட்டு வேறொரு புண்ட்ரத்தை ஆதரித்திருக்க ப்ரஸக்தியுண்டோ? "D. T. T. போல்வாருடைய அசட்டுக் கொள்கையை நாங்கள் ஆதரிப்பதில்லை" என்று பிறர் சொல்லிவிடுவதாக வைத்துக்கொள்வோம். அதனாலென்ன? கீழே விவரித்துக்காட்டிய ப்ரத்யக்ஷாநுபவங்கள் பலவற்றை அபலபிக்கமுடியுமோ? திடமாக நெஞ்சில்கொள்ள வேண்டியது ஒன்றே. தேசிகர் வேறு ஸம்ப்ரதாயஸ்தராக இருந்தால் ஒரு திவ்யதேசத்திலாவது அவருக்கு விக்ரஹப்ரதிஷ்டை நேர்ந்திருக்குமோ? பிறர் தம்மால் ஆக்ரமிக்கப்பட்ட சில ஸ்தலங்களில் மணவாளமாமுனிகளின் திருக்கோலம் உத்வாஸனம் செய்யப்பட்டிருப்பதுபோல் ஸாத்விக கலையார் தேசிக விக்ரஹோத்வாஸனம். ஓரிடத்திலும் செய்திருக்கவில்லையென்பது. எந்த ஸ்தலத்திலும் தேசிக விக்ரஹப்ரதிஷ்டாபனம் செய்திருப்பவர்கள் தென்கலையார்களேயொழிய வேறு கலையாரல்லர். அவர்கள் உள்ளே புகவே ப்ரஸக்தியில்லையே. ஆங்காங்கு நவீனமாக பாஹ்யபூமிகளில் தேசிகப்ரதிஷ்டை செய்திருக்கிறார்களே, இது வடகலையாருடைய திருப்பணியே. இதை இல்லை செய்வாரில்லை.

தேசிகரைத் தென்கலையாரும் ஆதரித்துக் கொண்டிருக்கச் செய்தே வடகலையார்கள் அவரைத் தங்களுக்கே குருவாகக்கொள்ள எப்படி முன்வந்தார்கள்? தென்கலையார்க்கு

தேசிகரிடத்தில் கௌரவ ப்ரதிபத்தியிருந்திருக்குமானால் தேசிகர் பண்ணின தமிழ்ப் பாட்டுக்களை இவர்கள் ஏன் கோவில்களில் சொல்வதில்லை? என்றிப்படி சில கேள்விகள் கேட்கிறார்கள். கேண்மின். ஸ்ரீராமாநுஜர் திருவடிகளில் ஆச்ரயித்த எம்பார் முதலியாண்டான் அருளாளப் பெருமாளெம்பெருமானார் முதலானாரிடத்திலே எல்லாரும் ஸமரூபமான பக்தியைக் கொண்டிருக்கிறார்களென்பதில்லை. வாதிகேஸரி அழகிய மணவாளச் சீயரென்பவர் வித்வத்வரேண்யராய் ஸம்ஸ்க்ருத த்ராவிட க்ரந்தங்களை இயற்றியிருந்தும் அவரிடத்தில் விசேஷ ப்ரதிபத்தி கொண்டிருக்கவில்லை. பக்தியுமில்லை, த்வேஷமுமில்லை என்னலாம். தேசிகரிடத்திலும் அப்படியிருந்தார்களென்பது தத்துவம். கூரத்தாழ்வான் எம்பார் பட்டர் போல்வாரிடத்திலே வடகலையார்க்கு பக்தியா த்வேஷமா என்று கேட்டால் என்ன விடை வெளிவரும்.

அருளாளப் பெருமாளெம்பெருமானார் அருளிய ஞானஸார ப்ரமேய ஸாரங்களையும் திவ்யகவிபணித்த அஷ்டப் பிரபந்தங்களையும் நீங்களும் ஏன் கோவில்களில் ஓதுவதில்லை? என்று கேட்டால் என்ன விடை கூறுவீர்கள்? தேசிகப் பிரபந்தங்களென்கிற தமிழ்ப் பாட்டுக்களைப் பற்றின உண்மைகளைப் பலகால் பன்னிப்பன்னியுரைத்திருக்கிறோம். அவை பிரபந்தமாகத் தோன்றியவையல்ல; அவர் எழுதியுள்ள ரஹஸ்யங்களில் ஆதியிலும் அந்தத்திலும், ரஹஸ்யத்ரயஸாரத்தில் அதிகாரந்தோறும் ஆதியிலும் அந்தத்திலும் சுலோகங்கள் இட்டிருப்பதுபோல பாட்டுக்களும் இட்டிருக்கிறார். அந்த அந்த சுலோகங்களை எப்படி தனியே சொல்லுவதில்லையோ அப்படியே பாட்டுக்களையும் தனியே சொல்லுவதற்கு ப்ரஸக்தியில்லை. அம்ருதாஸ்வாதினியென்றும் அம்ருதரஞ்சனியென்றும் நவீனர்கள் புதிய பெயர்களையிட்டு தேசிகப் பிரபந்தமென வழங்க ஆரம்பித்தது மிகவும் நவீனம். அடைக்கலப்பத்து முதலான சில பிரபந்தங்கள் வேறு சிலர் செய்தவை தேசிகப் பிரபந்த வகுப்பில் சேர்ந்துவிட்டன. பிரபந்த சாரமென்கிற பிரபந்தத்தைப்பற்றி அலசியலசி யெழுதியிருக்கிறோம். உண்மை உள்ளத்தில் படாமலில்லை. எப்படி படாமலிருக்கும். ஆனாலும் இப்போதாக என்ன பண்ணமுடியும்? ஜாரபுருஷனோடே பும்ஸவன ஸீமந்தமும் நடந்து மக்களும் பிறந்துவிட்டால் உற்றாருறவினர் சிலர் கலந்தும் பரிமாறிவிட்டால் மேன்மேலும் பரம்பரை பெருகத்தட்டுண்டோ? பெருகட்டும், உருகட்டும். என்ன பாசுரம்! என்ன பாசுரம்!! என்று கண்ணீர் உகுக்கட்டும். "மூங்கிலிலைமேலே தூங்கு பனி நீரே, ஓங்கு கதிரோனே வாங்கி விடு நீயே" என்றாற்போன்ற ஏற்றப்பாட்டுக்களைச் சொல்லி விக்கிவிக்கியழுவாருமுளர். யதார்த்தம் என்றேனுமொரு நாள் வெற்றிபெற்றே தீரும். இன்னமும் விரிவான விஷயங்கள் வைதிகமநோஹராவில் ஸம்ஸ்க்ருதஜ்ஞர்களால் காணத்தக்கவை. இங்கு இவ்வளவே போதும். ... ❋

**விசேஷ அறிக்கை;**—வைதிக மநோஹரா 163 லக்கமுள்ள ஸஞ்சிகை 20-7-68ல் வெளிவரும். அதில் மேலே கண்ட விஷயங்கள் மட்டுமில்லை; பரமபாவனமான தேசிக சரித்ரம், நவீனர்கள் எழுதியுள்ள சரித்திரங்களின் விமர்சம், தேசிக திவ்யஸூக்தி ரஸாஸ்வாதங்கள் முதலியன மலிந்துள்ளன. ... ... ... ❋

# ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்ய ப்ரதிஷ்டா.

- பண்டிதவுலகம் முழுதும் பார்க்க -

ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யமென்பது ஸ்ரீ உ.வே. மதுராந்தகம் வீரராகவாசார்யஸ்வாமி சென்றவாண்டில் வெளியிட்டிருந்த ஸம்ப்ரதாயஸுதாவென்னும் சிறு சுவடிக்கு மறுப்பாக ஸ்ரீராமாநுஜனிலேயே (229-230ல்) வெளிவந்த நூல் என்பதை மறந்திருக்க மாட்டீர்கள். அதில் (பக்கம் 35ல்) "நம்முடைய கோரமான சபதமொன்று" என்று மகுடமிட்டு எழுதப்பட்டுள்ள (38 ஆம்) வாக்யச்ரேணி கீழ்வருமாறு—

"தேசிகனை ப்ரதிவாதி பயங்கரம் அண்ணன் அப்படி கொண்டாடியிருக்கிறார். சோளஸிம்ஹபுரம் தொட்டயாசாரியர் ஸ்வாமி இப்படி கொண்டாடியிருக்கிறார்...... என்று ஒருவர் மாறி ஒருவராக எழுதியும் பேசியும் போருவதனால் என்ன ஸாதித்தீர்களாகிறீர்கள் என்பது தெரியவில்லை. ப்ரதிவாதி பயங்கர வம்சஸ்தர்களும் தொட்டயாசார்ய வம்சஸ்தர்களும் இல்லாமல் போகவில்லையே. அந்நாள் தொடங்கி இந்நாள் வரையில் விலக்ஷண சிஷ்ய ஸம்பத்தோடே விளங்கிவரும் பரம்பரையினரானவிவர்கள் அன்றுமின்றும் தென்கலை ஸம்ப்ரதாயஸ்தர்களேயல்லது ஒரு காலத்திலும் ஒரு தேசத்திலும் இதர ஸம்பிரதாயத்தில் காட்டமுடியாது. இவ்வுபய பரம்பரையிலும் வேதாந்தாசார்ய நாமகரணம் விவாதம் முற்றின இக்காலத்திலும் இடையறாது தொடர்ந்து வாரா நின்றது. நம்முடைய எத்தனை நூல்களில் இவ்விஷயம் புனருக்தி தோஷத்திற்கு அஞ்சாமல் நிரூபிக்கப்பட்டிருக்கின்றதென்பதை உலகமும் மறவாது. நீங்களும் மறவீர்கள். கி. பி. பத்தொன்பதாவது நூற்றாண்டு பிறந்த பிறகுதான் நீங்கள் தேசிகனையறிந்தவர்களே யொழிய, அதற்கு முன்பு தேசிகனென்றோ எம்பெருமானாரென்றோ ஆழ்வாரென்றோ ப்ரஸ்தாவித்த ஒரு வடகலை வ்யக்திகூட இல்லை இல்லையென்று சபதம் பண்ணியெழுதியிருக்கிறேனே; எழுதின மசி இன்னும் உலரவில்லையே. நீங்கள் அகாண்டே த்வேஷிக்கும் மணவாள மாமுனிகளும் தேசிகோக்திகளைத் தம்முடைய வியாக்கியானங்களிலே உதாஹரித்தருளியிருப்பதையும், மாமுனிகளுக்குப் பிறகும் ஸங்கிஹிதர்களும், வ்யவஹிதர்களுமான ப்ரக்க்யாத வித்வான்கள் பலர் தென்கலை ஸம்பிரதாயஸ்தர்கள் உதாஹரித்திருப்பதையும் நாமன்றோ பலகால் எடுத்துக் காட்டியிருக்கிறோம். இப்படி உங்கள் வகுப்பில் ஆழ்வாரையோ எம்பெருமானாரையோ தேசிகனையோ ப்ரஸ்தாவித்த புராதந வ்யக்தியைக் காட்டிவிட்டீர்களானால், இதுகாறும் நான்கு பாஷைகளிலும் நானெழுதி வெளியிட்டுள்ள எழுநூறு புத்தகங்களையும் கிழித்தெறிந்துவிட்டு ஆயுச்சேஷமுள்ள வரையில் அஜ்ஞாதவாஸம் செய்வேனென்பது ஸத்யம்." என்பதாக.

இப்படியெழுதியிருப்பதை உலகமெல்லாம் கண்டிருக்கிறது. மதுராந்தகம் ஸ்வாமியோ அதை மனப்பாடம் செய்து வைத்துக்கொண்டிருக்கிறார். இப்படிப்பட்ட இவர் செய்யவேண்டிய காரியம் என்ன? நானெழுதி வெளியிட்டுள்ள எழுநூறு புத்தகங்களையும் நானே கிழித்தெறிந்துவிட்டு ஆயுச்சேஷமுள்ள வரையில் அஜ்ஞாதவாஸம் செய்துவரும்படி என்னைச் செய்யவேண்டும். "தேவரீருடைய திருமாளிகையில் வாசற்காப்பானாயிருந்து வாழ்நாளைக் கழிப்பேனென்றும் அவர்க்கே எழுதியிருக்கிறேன். இக்காரியங்களை

நான் செய்யும்படியன்றோ இந்த மதுராந்தகம் ஸ்வாமி முயலவேண்டும். அது செய்திலர். வைவஸ்வத மந்வந்தரே கலியுகே அந்திமேபி பாதே செய்யகில்லாரென்பதை மீண்டும் சபதமிட்டுரைக்கின்றேன். இது கிடக்கட்டும்; "எதிர்த்தலையிலுள்ளவொரு துர்ப்பிக்ஷத்தை யுரைத்தல்" என மகுடமிட்டு அந்த ஸாம்ராஜ்ய நூலிலேயே நாற்பதாவது வாக்யச்ரேணி யெழுதியிருக்கிறோம். (அதாவது)

"வாயெடுத்தால் தேசிகன் தேசிகன்—தேசிக தர்சனம் தேசிக ஸம்ப்ரதாயம் என்கிறீர்களேயொழிய, அந்த தேசிகன் நிர்ணயித்த அர்த்தங்கள் இன்னின்னவையென்று நிராபாதமாக எடுத்துக்காட்ட வல்லீர்களோ! "விசிஷ்டாத்வைத தர்சனம்" என்றும் "தென்னாசார்ய ஸம்ப்ரதாயம்" என்றும் நான் வெளியிட்டிருக்கிற நூல்கள் பலவாண்டு களாக உலகம் பரவியுள்ளன. இவை ஒரு பாஷையிலல்ல; வடமொழி தென்மொழி வடுகுகளான மூன்று பாஷைகளிலென்பதை உலகமறியும். இவற்றை ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்து வெளியிட்டுள்ளார்கள்! வெளியிட்டு வருகிறார்கள். இப்படி "தேசிக தர்சனம்" என்று பெயரிட்டு ஒரு சுவடி எழுதி உதவுவீர்களா? அப்படியெழுத உங்களிடம் என்ன சரக்கிருக்கிறது? "யதி ஸ்யாத் உபலப்யேத" என்பது உங்களுக்குத் தெரியாததா? நீங்கள் கொண்டிருக்கிற ஒவ்வோர் அர்த்தமும் ஆழ்வார் ஸ்ரீஸூக்தி விருத்தம். பகவத் பாஷ்யகார ஸூக்தி விருத்தம், கிம் பஹுனா? ஸ்ரீதேசிக ஸூக்தி விருத்தம்-என்று நாம் விபுலமாகச் செய்துள்ள—செய்துவருகின்ற—ப்ராப்த ஸமயேஷு செய்யப் போகின்ற நிரூபணங்கள் "வாஸுதேவக்ருஹம் த்வேகம் ந ப்லாவயதி ஸாகர:" என்னும்படி நிற்பவையன்றோ? உங்களில் வித்வான்களுக்குக் குறைவா? பிரசுரம் செய்யப் பத்திரிகைகளுக்குக் குறைவா? எதிலும் எக்குறையுமில்லையே. வேதத்தில் "துர்ப்பிக்ஷம் தேவலோகேஷு" [தைத்திரீயாரண்யகே.] என்றாப்போலே உங்கள் திறத்திலே "துர்ப்பிக்ஷம் ஸாத்விகார்த்தேஷு" என்ன வேண்டியன்றோ நின்றது. இப்படி நாம் துணிந்தெழுதுகிறோமென்று *ஸந்தாபயதி ஸ்வம்தேஹ மாபாததலமஸ்தகமாக தபிக்கலாம். சில பாலிசர்களையிட்டு உபாலம்ப வர்ஷங்கள் செய்யலாம். வேறொன்றுமாகாது." என்பதாக.

இப்படியெழுதியிருப்பதை வாசியாத வித்வான்களுண்டோ? இவர்கள் தேசிக பக்தர்களுக்குச் செய்யவேண்டிய உபகாரங்களில் இதுவன்றோ தலையானது? அவர் செய் யாததும் பின்புள்ளவர்கள் செய்ததுமான சில பிரபந்தங்களை வம்புச் சண்டைக்காக அச்சிடுவதும், சிறு பசங்கள் அவற்றை மனப்பாடம் செய்து கோஷித்தால் பணம் காசு தருகிறோமென்பதுமான சில்லரைச் செயல்களால் என்ன தொண்டு செய்ததாகும்? இந்த எழுநூறாண்டு கொண்டாட்டத்திற்கு நீண்டகால நினைவு மலராகப் பல பாஷை களிலும் வெளியிட வேண்டியதென்னவென்றால் கேண்மின். "தேசிக தர்சன தத்வார்த் தங்கள்" என்று மகுடமிட்டு, ஸ்வாமி தேசிகன் ஸ்தாபித்தருளின ஸம்ப்ரதாய தத்து வங்களை ஸாமான்ய ஜனங்களும் எளிதில் புரிந்துகொள்ளும்படியான நூல்களைப் பரவ விடுவது ஒன்றே உண்மைத் தொண்டர்கள் உலகம் போற்றச் செய்யத்தக்கது.

ஸ்ரீ ராமாநுஜன் 141, 142ல் நாம் வெளியிட்டிருப்பது "தேசிக ஹ்ருதயம்" என்கிற நமது நூல். இது ஆசார்ய ஹ்ருதயம்போல் கஹனமான நூலன்று, வியாக்

கியான ஸாபேக்ஷமன்று. தேசிக திவ்ய ஸூக்திகளை மட்டும் எடுத்துக்காட்டி அவருடைய திருவுள்ளத்தை நிர்த்தாரணம் செய்திருப்பது இந்நூல். இதை உலகமெல்லாம் கொண்டாடியிருக்கின்றது. அது யுக்தமென்று தோன்றினால் அதை இவர்கள் மறுபதிப்புச் செய்விக்கட்டும். இல்லையேல், அதிலுள்ள நிரூபணங்களை தேசிக திவ்ய ஸூக்திகளைக் கொண்டே மறுத்து, அவற்றுக்கு பகவத் பாஷ்யகாராதி திவ்ய ஸூக்தி ஸம்வாதமும் காட்டி "தேசிகஹ்ருதய யாதாத்ம்யம்" என்னும் பெயரையிட்டோ, தங்களுக்குத் தோன்றின பெயரையிட்டோ பண்டித பாமரபோக்யமானவொரு நூலை வெளியிடட்டும். இதை செய்யகில்லாமல் "நெல்வேலியில் ஒரு லக்ஷம்; நெய்வேலியில் இரண்டு லக்ஷம்; கீழ்ப்பாக்கத்தில் மூன்று லக்ஷம்; மேல்பாக்கத்தில் நான்கு லக்ஷம் .." என்றிப்படி வஸூல் கணக்கை வாய்வெருவிக் கொண்டிருப்பதனால் என்ன கோட்டை பிடித்ததாகும்? அப்படியொரு நூல் வெளிவந்தால் "பாறிப்பாறியசுரர்தம் பல்குழாங்கள் நீறெழ" என்ற ஆழ்வார் பாசுரத்தின்படியே அடுத்த நாளிலேயே (அல்லது) அடுத்த க்ஷணத்திலேயே அது பாறிப்பறந்து போமென்பதைத் தெரிந்துகொண்டுதானே யிருக்கிறீர்கள்.

திருவாய்மொழியில் (10—7—5.) *நண்ணுவசுரர் நலிவெய்த நல்லவமரர் பொலிவெய்த—பண்ணார் பாடலின் கவிகள் யானாய்த் தன்னைத் தான்பாடி* என்பது மிகவற்புதமான பாசுரம். ஆஸுரப்ரக்ருதிகள் அழியும்படியாகவும் தேவப்ரக்ருதிகள் வாழும்படியாகவும் திருவாய்மொழி அவதரித்ததாக ஆழ்வார் தாமே அருளிச்செய்து வைத்தார். திருவாய்மொழியினால் ஆஸுரப்ரக்ருதிகள் எப்படியழியக்கூடும்? என்பதை நிரூபிக்க விரும்பின நம் பிள்ளை ஈடு முப்பத்தாறாயிரப்படியில்—"அவ்யபதேச்யனுக்கு அனந்தரத்திலவன், தமப்பன் செய்ததைக் கேட்டு 'இவன் என் செய்தானானான்! என்று கர்ஹித்தான். ஒரு மதிளை வாங்குங் காட்டில் அத்தர்சனம் குலைந்ததோ? திருவாய்மொழியென்றும் ஸ்ரீராமாயணமென்றும் வலியன இரண்டு ப்ரபந்தங்களுண்டாயிருக்க' என்றானாயிற்று. இப்படி உகவாதார் நெஞ்சுளுக்கும்படியான ப்ரபந்தமாய்த்து." என்றருளிச்செய்துள்ளார். இதன் பொருள் விவரித்தாலல்லது விளங்காததலால் விவரிக்கிறோமிங்கு. அவ்யபதேச்யனென்றது க்ரிமிகண்ட சோழனை. மஹாத்ரோஹியான அவன் பெயரை வாயால் சொல்லத் தகாதென்று கொண்டு அவ்யபதேச்யனென்றது. அவனுக்கு அனந்தரத்திலவன்—அவனுடைய மகன். இவன் தகப்பனிறக்கும்போது சிறுவனாயிருந்தபடியால் தந்தையின் ஸொத்துக்களைப் பிறர் பாதுகாத்திருந்து பருவம் முதிர்ந்தவாறே இவனிடம் ஒப்படைத்தார்கள். அப்போது சொற்பமான செல்வமே இவனுக்குக் கிடைத்தது. "என் தகப்பனார் பெரிய லக்ஷாதிகாரியென்று ப்ரக்யாதி பெற்றிருந்தாரே, நீங்கள் இப்போது என்னிடம் சில ஆயிரங்களை ஒப்படைக்கிறீர்களே, அவருடைய பெருஞ் செல்வமெல்லாம் எங்கே போயிற்று?" என்று மகன் கேட்க, அவர்கள் சொன்னார்களாம்—'அப்பா! உன் தகப்பனார் பூலோக குபேரனென்னும்படி வாழ்ந்தது வாஸ்தவமே; ஏராளமாகச் சிவன் கோவில்களைக் கட்டுவித்தும், பெருமாள் கோயில்களை இயன்றவளவு இடிக்கச் செய்தும் தனது ஸொத்துக்களையெல்லாம் பாழ்படுத்தினான் என்பது உனக்குத் தெரியாதா? இப்போது மிச்சப்பட்ட பொருள் இவ்வளவே காண்' என்றார்களாம். மஹாவிவேகியான மகன் அது கேட்டு 'என் பிதா சிவன் கோவில்கள் கட்டுவித்ததிருக்கட்டும், பெருமாள் கோவில்களை இடித்துப்

பொகட்டானென்கிறீர்களே; வைஷ்ணவதர்சனம் குலேயவேணுமென்றுதானே இது செய்தது; இதனுல் வைஷ்ணவதர்சனம் குலேந்ததாகுமோ? ஒரு ஸ்ரீராமாயணமும் ஒரு திருவாய்மொழியுமாகிற இரண்டு கற்பாந்தக் கோட்டைகள் ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்திற்கு வலிய மதிள்களாக விளங்கா நிற்க, கோவில்களே யிடித்ததனுல் என்னுகுமையா!' என்றும் ஸ்ரீவைஷ்ணவதர்சனத்திற்குத் திருவாய்மொழியும் ஸ்ரீராமாயணமும் ஆஸுரப்ரக்ருதிகள் மண்ணுண்ணும்படியாக பிரளயத்திலுமழியாத பெருங்கோட்டைகள் என்று அச்சிறுவனுக்குத் தெரிந்திருந்தது.

அதுபோல ஸ்ரீவசனபூஷணமும் ஆசார்ய ஹ்ருதயமுமாகிற இரண்டு பிரபந்தங்கள் வலிய கோட்டைகளாய் விளங்கப்பெற்ற பகவத் ராமாநுஜ தர்சனத்திற்குப் போட்டியாக ஒரு அவ்யபதேச்ய தர்சனங் கிளம்பி என்ன ஆரவாரம் செய்தாலும் என்ன கூத்துக்களடித்தாலும் எத்தனே லக்ஷங்கள் திரட்டினுலும் "ஸர்வம் ஹுதம் பஸ்மநி" என்றுமென்று தெரிந்து கொள்ளவில்லேயே திண்ட்ராமாச்சாரி போல்வார். 'ஆயிரம் கம்பபாணங்களுக்கு அச்சகாரம் கொடுத்திருக்கிறேம்; ஐயாயிரம் அதிர்வேட்டுகளுக்கு அட்வான்சு அளித்திருக்கிறேம்; வக்ர நாமமிட்ட விசிறிகள் ஒரு லக்ஷம் விநியோகிக்கப்படும். சூர்ப்ப நாமமிட்ட சுண்டல் கூடைகள் சுமை சுமையாக வந்து கொண்டேயிருக்கும்' என்றிப்படி விளம்பரங்களேச் சுவர்தோறும் தொங்கவிட்டு வைக்கலாம். "நம: ஸ்ரீசைலநாதாய குந்தீ நகரஜன்மநே, ப்ரஸாதலப்த பரம ப்ராப்ய கைங்கர்யசாலிநே." என்கிற தனியனுக்குப் பிரதியாக கோஷிக்கப்படுகிற "நமோ ராமாநுஜார்யாய வேதாந்தார்த்த ப்ரதாயிநே, ஆத்ரேயபத்மநாபார்யஸுதாய குணசாலிநே." என்கிற சுலோகம் யார் செய்தது? எப்போது செய்தது? என்கிற கேள்விக்குமட்டும் விடையிறுத்துவிட்டால் தேசிக தர்சனம் அத்விதீய தர்சனமேயென்று யாமே பறை சாற்றுவோம் என்று எத்தனே வருஷமாக விளம்பப்பட்டுவருகிறது தெரியுமோ?

வடமொழியில் ஒரு சுலோகத்தின் ஒரு பாதத்தை ஸமஸ்யையாகக் கொடுத்தால் நிபுணர்கள் பலர் தம்தம் மதிக்கேற்ப மூன்று பாதங்களேயிட்டுப் பூரணம் செய்வர்கள். "குளீரகுஹரே கரீ பரிலுநாதி பஞ்சாநநம்" என்றெரு ஸமஸ்யை; இதற்குப் பல வித்வான்களால் பலவிதமான பூரணங்கள். அப்படியாக, "வாய்திறக்க வுண்டோ வழி" என்று வெண்பாவின் ஈற்றடியொன்றை ஸமஸ்யையாக இட்டுவைத்தால் இதற்கு முன்னடிகள் மூன்றும் அற்புதமற்புதமாக ஆயிரமாயிரமாகவன்றே வெளிவரும்.

திவ்யப்பிரபந்தங்களிற் பாடங்களேத் தம் மனம்போனபடி திருத்திக்கொண்டிருந்த (இராமநாதபுரம்) ராவ்ஸாஹிப். மு. ராகவையங்கார் பல வருடங்கள் நம்மோடு போராடி, முடிவாக,

> "**அண்ணங்க ராசிரிய ராராய்ந்தருள் செய்யும்**
> **வண்ணங்க ளத்தனேயும் வாய்மையுரை—திண்ணமென**
> **வாய்திறந்து வாயார வாழ்த்தா திகழ்வார்க்கு**
> **வாய்திறக்க வுண்டோ வழி.**"

என்கிற வெண்பாவை விஜ்ஞாபித்து விச்ராந்தராஞரென்பதை உலகமறியும். அப்போது தான் "வாய்திறக்க வுண்டோ வழி" என்கிற ஸமஸ்யை ஏற்பட்டது.

இனி உபக்ராந்த விஷயத்திற் செல்வோம். "ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்ய ஸமாபனம்" நாம் வெளியிட்டு நாலாறுமாதமாயிற்று. இதுகாறும் வாளாவிருந்த ஸ்ரீமதுராந்தகம் ஸ்வாமி திடீரென்று ஒருநாள் (20—6—68ல்) ஏதோ நினைத்துக்கொண்டு சில வெள்ளைக் காகிதங்களைக் கறுப்பாக்கியனுப்பினர், அதிகரணஸாராவளியில் *பாஷ்யாதிக்ரந்தலேசோபி அவஹிதமநஸாம் ஐதமர்த்த்யம் பஜேத* என்றதைப்பற்றி நாமெழுதியிருந்தவற்றுக்கு அநந்விதமாகச் சில வார்த்தைகளையெழுதிவிட்டு "தேசிக திவ்ய ஸூக்தியில் ஸ்ரீபாஷ்ய விரோதமிருப்பதை எடுத்துக் காட்டுகிறவர் கடல் சூழ்ந்த இம்மண்ணுலகில் தேவரீர் ஒருவர்தானே" என்று முடித்திருந்தார். உடனே அதற்கு விடையிறுத்தேன்; "ப்ராமாணிக வ்யவஹாரம் நடத்தவேண்டி அடியேன் தேவரீர் எழுதினதை அப்படியே இசைகிறேன். இதேபோல தேவரீரும் பிராமாணிகமான வழியில் விடையிறுக்க வேணும்" என்று மூன்று விஷயங்கள் விஜ்ஞாபித்தேன்; (அவை யாவன)

1. **"ஏகக்ரந்த சகல அஸ்வாரஸ்யம் க்ராஹ்யம்"** என்றெழுதி பகவத் பாஷ்ய கார ஸ்ரீ ஸூக்தியில் அஸ்வாரஸ்யமேறிட்டவர் ஸ்ரீவைஷ்ணவாசார்யர்களில் ஸ்ரீநிகமாந்த மஹாகுருவொருவர் தவிர வேறொருவரில்லையே.

2. தத்வடீகா ஸ்ரீஸூக்தி யொன்றை யெடுத்துக்காட்டி "அத்ராஸ்தி பஹூ அஸாமஞ்ஜஸ்யம்" என்றெழுதி தேசிக திவ்ய ஸூக்தியை அஸமஞ்ஜஸமென்று தூஷித்தவர் தேசிக பக்தம்மந்யர்களில் ஸ்ரீ D. T. தாதாசாரியாரொருவர் தவிர வேறொருவரில்லையே.

3. "பகவத்ராமாநுஜரும் கூரத்தாழ்வானும் சேர்ந்து கோவில் சாவிகளைத் தந்திரமாகப் பறித்துக் கோவில் துறையார்களை நிர்ப்பந்தப்படுத்திப் புண்ட்ர விபர்யயம் செய்வித்தார்கள்" என்றெழுதியச்சிட்டிருப்பவர்கள் (மேலே குறித்த) D. T. தாதாசாரியாரும் தேவரீரும் தவிர வேறொருவர் இல்லையே.

இங்ஙனே மூன்று விஷயங்களை நாம் எழுதி "இவற்றுக்கு ப்ராமாணிகமாக விடையெழுதி யனுப்பவேணும்" என்று விநயத்துடன் பிரார்த்தித்திருந்தேன். மத்யஸ்தமஹாசயர்களே! இங்கு ப்ராமாணிகத்வபரிரக்ஷணத்தை நாம் இசைந்ததுபோல இவரும் மேலே நிரூபித்த மூன்று விஷயங்களையும் இசைய வேண்டியது தவிர வேறுண்டோ? இப்படி நாம் கேட்கக் கூடியவை பலபலவிருந்தாலும் இவருடைய ப்ராமாணிகத்வப் பரிசைத் தெரிந்துகொள்வோம், உலகமும் தெரிந்துகொள்ளட்டும்—என்று மூன்றே விஷயங்களை வரைந்தோம். இதற்கு இவர் என்ன பதிலெழுதினரென்பதையும், அதற்கு நாம் என்ன பதில் எழுதினோமென்பதையும் அந்த வித்வன் மணி ஸ்வாமியையே கேட்டுத் தெரிந்துகொள்வது. அந்த ஸ்வாமிக்கு ஆப்தர்களான பெரியார் பலருளரே. அவர்கள் அவரையே கேட்டுணர்வது நன்று.

நீதிநன்னெறிதவறி யெழுதிக்கொண்டிருந்தவிவர்க்கு நேற்று நாம் முடிவாகத் தெரிவித்தது கேளீர்—"வித்வத்வரேண்ய வீரராகவாசார்ய ஸ்வாமிந்! நாம் காலையிலெழுதி மாலையிலச்சிட்டு வெளியிட்டு லோகோபகாரம் செய்து வருகிறோமென்பதைப் பல வாண்டுகளாக தேவரீர் தெரிந்து கொண்டிருக்கிறது. வெட்டியாக எழுதி அவகாசத்தை வீண்படுத்த விருப்பமில்லையடியேனுக்கு. பாதுகாப்ரியாதி பத்ரிகைகளில் தேவரீருடைய கட்டுரைகள் வெளிவந்தால் பிறகு அடியேனெழுதுமவை லோகோபகாரத்தில் பர்யவஸிக்கும்." என்று தெரிவித்து நின்றேன். ... ...

— கடிதங்கள் —

# 1. பெங்களூரிலுள்ள ஒரு மஹா விவேகியின்கடிதம்.

ஏறக்குறைய இருபது வருஷங்களுக்கு மேலாக எனக்குப் பரமாப்தரான வொருவர் பெங்களூர் ஸிடியில் விளங்கி வருகிருர். இவர் வடகலை ஸம்பிரதாய ஸ்தர். ஆனால் இவர் மஹா விவேகியாதலால் ஒரு தலையான பக்ஷபாதம் கொள்ளு கிற மனப்பான்மை இவரிடம் அணுவளவும் கிடையாதென்பது ஒரு ஆச்சரியமான விஷயம். இவருடைய திருநாமத்தை இப்போது வெளியிடவேண்டாமென்று கொண்டேன். இவர் ஸம்ஸ்கிருதத்திலும் ஆங்கிலத்திலும் மிக்க புலமையுடையவ ரென்று தெரிகிறது. தமிழும் கன்னடமும் இவர்க்கு ஸஹஜம். இவர் என்பால் பரம ப்ரீதி கொண்டவராயிருந்தும் காதாசித்கமாகத்தான் கடிதமெழுதுவர். ஸ்ரீராமாநுஜனையும் வைதிக மநோஹராவையும் ஆரம்பமே பிடித்து வருவித்துப் படித்து வருகிருர். அவற்றில் தாம் கண்ட சுவைகளைச் சில ஸமயங்களில் ஆனந்த பரவசராய்த் தெரிவிப்பர். பெரும்பாலும் வடமொழியிலெழுதுவர்.

இவர் ஏழெட்டு மாதங்களுக்கு முன்பு ஒன்று தெரிவித்திருந்தார். அதாவது, ''ஸ்ரீராமாநுஜனிலும் வைதிக மநோஹராவிலும் வெளிவரும் வியாஸங்கள் ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கப்பட்டு வெளி வந்தால் லோகோபகாரம் மிகவும் அதிகரிக்குமென்று நினைக்கிறேன்; க்வாளியர்நகரில் வாழும் ஸ்ரீ. உ. வே. ஸத்ய மூர்த்தி ஐயங்காரவர்கள் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து உதவிய வியாஸங்களை ஸ்ரீராமாநுஜனில் வாசித்திருக்கிறேன்; அவரைப்போல் மொழி பெயர்க்கவல்லார் வேறு எவரும் இருக்கமுடியாதென்பதே எனது கொள்கை: அந்த ஸ்வாமியைக் கொண்டே தேவரீருடைய இன்னும் பல முக்கியமான வியாஸங்களையும் மொழி பெயர்ப்பித்து வெளியிட்டால் நன்ருயிருக்கும். மொழி பெயர்ப்பில் எனக்கும் ஸ்வல்ப பரிசயமுண்டு; நியமித்தால் இயன்றவளவு கிஞ்சித்கரிக்கிறேன்'' என் றெழுதியிருந்தார். அப்போது அதற்கு நான் பதில் எழுதியிருந்தேன்–''உமக்கு ருசிக்கிற எந்த வியாஸத்தை ஆங்கிலப்படுத்தியனுப்பினுலும் வெளியிடுகிறேன்'' என்று. ஆனால் அப்போது அவர் ஒன்றும் எழுதியனுப்பவில்லை.

சென்ற மாதத்தில் ஸ்ரீராமாநுஜன் 234 ஸஞ்சிகையை அவர் வாசித்து அதில் ''யதார்த்தவாதீ பஹுஜனத்வேஷீ'' என்று மகுட மிடப்பெற்ற வியாஸத்தை ஆங்கிலத்திலும் கன்னடத்திலும் மொழி பெயர்த்தனுப்பப் போவதாக 15-6-68ல் தெரிவித்திருந்தார். தவிரவும், அந்த வியாஸத்தில் (பக்கம் 26, வரி 3ல்) ''பண் டொருகால் அபத்தச் சுவடிகளையெல்லாம் ஆனை தலையின்மேல் வைத்து ஊர்வலம் வந்த போது உயிர்ப்பிச்சை பெறும் நிலைமை நேர்ந்ததும்.......'' இத்யாதியாக வுள்ள விஷயத்தை விளக்கமாகத் தெரிவிக்கவேணுமென்றும் கோரியிருந்தார், அது சென்ற விபவஸம்வத்ஸரத்துப் புரட்டாசித் திருவோணச் செய்தியல்லவா? அப்போது நாம் ''வேதண்டலீலா'' என்று பெயர்வைத்தெழுதிப் பிரசுரஞ் செய் திருந்த நாற்பது சுலோகங்களை யனுப்பி இவற்ருல் நன்கு விளக்கமுணரலாமென்

றெழுதியிருந்தோம். அப்போது ஆங்கிலப் பத்திரிகை யொன்றில் வெளி வந்திருந்த இச் செய்தியை ஒரு நண்பர் எடுத்துக் காட்டினதாகவும் அதனுலும் விவரம் புரிந்து கொண்டதாகவும் தெரிவித்து ஒரு வாரத்திற்குள் மொழி பெயர்ப்புகளையனுப்புவதாக வெழுதியிருந்தார்,

மூன்று வாரங்களாகியும் அனுப்பவில்லை, ஏன் அனுப்பவில்லையென்று நாம் கேட்பது உசிதமன்றென்று வாளாவிருந்திட்டேன். அவர் வடகலை ஸம்பிரதாய ஸ்தரா்கையாலே மனதில் ஏதாவது உத்வேகமுண்டாகியிருக்கும், அதனல் வெறு மனிருந்துவிட்டார் என நினைத்துக் கொண்டேன். இப்படியிருக்கையில் 5—7—68ல் அவருடைய ஆங்கில மொழி பெயர்ப்பு வந்துவிட்டது. கன்னட மொழி பெயர்ப்பை பெங்களூரில் அச்சிட ஏற்பாடு பண்ண வேண்டியதென்று எழுதிவிட்டார். இந்த ட்ரான்ஸ்லேஷனைச் சிறிது தாமதமாக அனுப்பினதற்குக் காரண மெழுதவிரும்பினர். 'ஏதோ பல ஜோலிகளில் தாமதமாய் விட்டது' என்று ஒருவரியெழுதியிருக்கலாம். ராமாயணமாக எழுதிவிட்டார், (அதாவது)

"ஸ்ரீராமாநுஜன் 234ல் கண்ட சில விஷயங்களையே மொழி பெயர்க்க விரும்பியிருந்தேன். ஆனல் நான் ஸ்ரீராமாநுஜன் பத்திரிகைகளை ஒன்று விடாமல் பல தடவைகூட படித்திருந்ததனல் அவைகளையும் ஒன்றுக்கு மேலொன்ருக எடுத்துப் பார்க்க நேர்ந்துவிட்டது. விச்வரூபங்கண்ட அர்ஜுனனுக ஆய்விட்டேன். ராமாயண உபந்யாஸங்களில் 'தோள் கண்டார் தோளே கண்டார்—தாள் கண்டார் தாளே கண்டார் என்று கேட்டிருந்தேன். அதே போல ஒவ்வொரு விஷயமும் என்னை மற்ருென் றில் போக வொட்டாதபடி பண்ணிவிட்டது. எங்கள் இனத்தில் படித்தவர் களில்லையா? மேதாவிகள் இல்லையா? விவேகிகள் இல்லையா? அவர்கள் இதையெல்லாம் பாராதவர்களா? எப்படி பாராமலிருந்திருக்கமுடியும்? தேவரீர் எழுதியுள்ள நூறும் இரு நூறுமான விஷயங்களில் ஒன்றிரண்டு பார்த்தாலும் போதுமே. திருக்கச்சிநம்பியை இக்காலத்தில் கோவில் களில் சிறப்பாகக் கொண்டாடுகிற செட்டிகள் தாங்கள் குறுக்குபூசிகளா யிருந்தும் தாங்கள் ஆதரிக்கிற அந்த நம்பிக்குத் திருமண்காப்பை மாற்றி குறுக்கு பூசச் செய்யவில்லையே யென்று தேவரீர் எழுதியிருக்கிற இந்த வொரு விஷயம் போதுமே. தீபப்ரகாசர் ஸன்னிதிக்கு தண்கா என்கிற பெயர் ஆழ்வார்கள் திரு வாக்கிலும் தேசிகர் திருவாக்கிலும் வந்ததா யிருக்க இதை விட்டு ஒரு புத்தகத்திலும் காணுத தூப்பில் என்கிற சொல் எப்படி வந்தது, எப்போது வந்தது என்று எனக்கும் புரியவில்லை. காஞ்சீ புரத்தில் தென்கலை வடகலை வியவஹாரங்கள் தீபப்ரகாச ஸன்னிதியைப் பற்றியும் நடந்ததாகச் சொல்லுகிருர்களே, அந்த விவகாரங்களிலாவது தூப்புல் என்பது ஏறியிருக்கிறதோ என்று தெரிந்துகொள்ள ஆவலுண்டு. நான் வடகலையாயிருந்தாலும் என்னுடைய மாதாமஹர் தென்கலை. அவரு டைய மடியிலேயே நான் ரொம்ப காலம் வளர்ந்தவன். இந்த பிராந்தத் திலேயுள்ள வடகலையாருக்கும் தென்கலையாருக்கும் எப்போதும் ஒருவித மான வைஷம்யமும் தெரியாது. இப்பப்போ மதராஸ் பிராந்தியத்தார் வந்து

எழுநூருண்டு விழாக் கொண்டாட்ட வியாஜத்திஞல் விரோத பாவங்களை ரொம்பவும் பிரசாரம் செய்து வருகிருர்கள். திண்ட்ராமாச்சாரி யென்பவர் இதில் மூர்த்தாபிஷிக்தராயிருக்கிருர்; பூர்வாசாரியர்களை நிந்திக்க ஆரம்பித்தவர் இவர்தானென்பது இப்போதுதான் தெரிய வருகிறது. இவருக்கு நீங்கள் கொடுத்திருக்கிற சாட்டையடிகள் போராதென்றே நினைக்கிறேன். 'ஜ்ஞானலவதுர்விதக்தம் ப்ரஹ்மாபி நரம் ந ரஞ்ஜயதி" என்கிற ஸுபாஷிதத்திற்கு இவரே முக்கியமான லக்ஷ்யபூத ரென்று பலபேர் சொல்லுகிருர்கள். உண்மையில் இவரிடத்தில் உலகம் மிகவும் நன்றி பாராட்டக்கடமைப்பட்டிருக்கிறது ஏனென்ருல், தேவரீர் மூலமாக என்னைப் போன்றவர்களும் பலவுண்மைகளைத் தெரிந்து கொள்ள இவரேயன்ரு மூல புருஷராகிருர். ஆனல் இவருடைய துராக்ரஹம் இவரை இந்த ஜன்மத்தில் விடாதென்றே பலரும் சொல்லுகிருர்கள். கண்டையைக் காதில் கட்டிக்கொண்டிருந்த வொருவனுக்கு கண்டாகர்ணனென்று பெயர் இருந்தது. கண்டையைத் தலையிலும் மடியிலும் கட்டிக்கொள்பவர்களுக்கு என்ன பெயர் வைக்கலாமென்பதை நீங்களே பிரசுரம் செய்யவேணும்."

இந்யாதிகள் பல பக்கங்கள் எழுதியுள்ளார். இவருடைய ஆங்கில மொழி பெயர்ப்பும் கன்னடமொழி பெயர்ப்பும் விரைவில் வெளிவந்து, தமிழறியாதவர்களுக்கும் நல்ல தெளிவைப் பிறப்பிக்குமென்பது நமது நம்பிக்கை. ... *

கடிதம் (2)

*From* :—

**THE LITTLE FLOWER Co.,**

PUBLISHERS & BOOKSELLERS, MADRAS—17.

2—7—1968

ஸ்ரீமான் ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி ப்ரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசார்ய ஸ்வாமி அவர்கள் திவ்ய சமுகம்

தங்கள் திருவடித்தாமரைகளை நோக்கி மானஸீகமாக நமஸ்கரிக்கிறேன். உபயகுசலோபரி.

ஸ்ரீ வேதாந்த தேசிகனின் 701-வது திருவவதார மஹோத்ஸவத்திற்கு எங்கள் கம்பெனியால் இயன்ற அளவில் சிறிதளவு தொண்டு செய்ய ஆசைப்படுகிருேம்.

அதற்காகத் தயாரித்த ஒரு விண்ணப்பம் இத்துடன் இணைத்திருக்கிருேம். இதைத் தங்கள் உபயமாக, மதிப்புக்குரிய தங்கள் பத்திரிகையில் கூடிய விரைவில் வெளியிடும்படி ரொம்ப தாழ்மையாகக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

வேணும் அநந்தகோடி நமஸ்காரம்.
V. வேங்கடேச அய்யர்,
மானேசர்.

ஸ்ரீ:

## வித்வான்களுக்கும் ஸ்ரீதேசிக பக்த சபையோர்களுக்கும்
# ஓர் விண்ணப்பம்.

(1) ஸ்ரீ கீலகஸூ புரட்டாசித் திருவோணம் (2—10—1968) ஸ்ரீ வேதாந்த மஹா தேசிகனின் 701வது திரு-அவதாரத் தினத்தன்று, இவ்வாசார்ய வள்ள லுக்கு அஞ்சலி செலுத்தும் வகையில், 'லிப்கோ' சார்பில் ஒரு சிறு நூலை அச் சிட்டு விநியோகிப்பதற்காகத் தொகுத்து வருகிறோம். அதில் சேர்ப்பதற்காக வித்வான்கள் இரண்டே வரியில் ஸ்ரீ தேசிகன் பெருமைபற்றி எழுதி, தமது முழு விலாசம், விருதுகளுடன் உடனே எழுதியனுப்பக் கோருகிறோம்.

(2) இந்நாளைய இளைஞர்கள் நெற்றிக்கு இட்டுக் கொள்ளும் அவசியத்தை ஞாபகப்படுத்தும்வகையில், திருமண் ஸ்ரீ சூர்ணம் முதலியவைகளுடன் கூடிய ஆயிரமாயிரம் பொட்டலங்களைத் தயார் செய்துவருகிறோம்.

ஏற்கெனவே, கடந்த வருஷம் இத்தகைய பொட்டலங்களை விநியோகித்து உதவிய ஸ்ரீ தேசிக பக்த சபையோர்களும், இவ்வாண்டு அவ்விதம் செய்ய விரும்பும் சபையோாகளும் தங்களுக்குத் தேவையான பொட்டலங்களின் எண்ணிக்கை, முழு விலாசம் ரயில் நிலையம் அல்லது லாரி சர்வீஸ் முதலிய விவரங் களை எழுதி 31—8—68க்குள் எமக்குச் சேரும்படி அனுப்பினால், தக்க சமயத்தில் To pay ஆக அனுப்ப ஏதுவாகும்.

சென்னை-17.
2—7—68. — *லிட்டில் ப்ளவர் கம்பெனி (லிப்கோ)*

## கடிதம் - 3.

டி லிப்கோமானேஜர் எழுதிய மற்றொருகடிதம்—

2-7-68 தேதிய தபால் கிடைத்திருக்குமென எண்ணுகிறேன். பகவானின் அநுக்ரஹமும், தங்களுடைய ஆசீர்வாதமும் இருக்குமானால், இந்தவருஷமும் ஐப்பசிமூலம் உற்சவம் கொண்டாட முயற்சி செய்துகொண்டிருக்கிறோம். போன வருஷம் இந்த உத்ஸவம் நாங்கள் செய்தது தங்களுக்கு ஞாபகமிருக்கலாம். தங்கள் அநுக்ரஹமும், ஆசீர்வாதமும் என்றும்தேவை.

வேணும், அநந்தகோடி நமஸ்காரம்
V. வேங்கடேச அய்யர்,
மானேசர்.

இதற்குபதில்;—சென்றவருடம் மணவாளமாமுனிகளுத்ஸவத்தை நீங்கள் செய்தவிதம் அறியேன். ஸ்ரீபெரும்பூதூர் உடையவர் திவ்யமங்களவிக்ரஹம் முதலான பல விக்ரஹப்போட்டோக்களில் புண்ட்ரவிபர்யயமாகிற விஷமச்செயல் கள் செய்துவருவதை நிறுத்திக்கொண்டால் இதுவே ஆயிரம் மணவாளமாமுனி களுத்ஸவம் செய்ததற்கு ஒப்பாகவும் மேலாகவும் எண்ணத்தக்கதாகும்.

இப்படிக்கு,
*ஸ்ரீராமாநுஜன் காரியதர்சி.*